


# தரத்தை மதிப்பீராயின், தரும் விலைக்குத் தக்க மதிப்பைத் தருவது ரெக்ஸ்!

எங்கள் ஸ்க்வாஷ்கள், நேர்த்தியிலும் நேர்த்தியானவையாகப் பார்த்துப் பார்த்துப் பறித்த பழங்களிலிருந்து தயாரிக்கப்பட்டவை. பிறகு, தெள்ளிய தூய சீனிப் பாகும் வேறு பல விசேஷச் சரக்குகளும் சேர்க்கப்பட்டவை. எனவே, சுவைத்தறியாப் புத்துணர்ச்சி தரும் பானமாக உங்களை அடைகிறது ரெக்ஸ்.




கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட்,  பம்பாய்-1.

[illegible]/1966A-TM



# கல்கி பொருளடக்கம்

கீலக சித்திரை 9 — ஏப்ரல் 21


| | | |
|---|---|---|
| மனிதருள் ஒரு மன்னர் | — | 3 |
| ராஜாஜியின் கருத்துக்கள் | — | 6 |
| விஞ்ஞானிகள் வரிசை ! | — | 14 |
| அருவங்கள் சேர்ந்தால்... | — | 15 |
| மகாபாரதம் | — | 18 |
| பறக்கும் தட்டு... | — | 22 |
| வீடுதோறும் வியட்நாம் | — | 26 |
| ஓநாய்க் கோட்டை | — | 34 |
| இனிக்கும் நினைவுகள் | — | 37 |
| பொன்னிவனத்துப் பூங்குயில் | — | 45 |
| ஏற்றுக் கொள்ளுங்கள் நேருஜி! | — | 52 |
| பாரத நாட்டுச் சிங்கங்கள் ! | — | 68 |
| பரீட்சையில் தேறப் புதுவழிகள் | — | 70 |
| படகுக் கார் | — | 72 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



பட விளக்கம் 16ம் பக்கம்

காகிதப் பாலம்!





தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ★ இதழ் 38



# மனிதருள் ஒரு மன்னர்

இயேசு நாதரும், ஆபிரகாம் லிங்கனும், மகாத்மா காந்தியும், ஜான் கென்னடியும் அடைந்த முடிவை மார்டின் லூதர் கிங்கும் அடைந்துவிட்டார்.

அன்புவழியில் செல்லும் உத்தமர்கள் கோரமாகக் கொலையுண்டு மரிப்பது வழக்கமாகி வருவதைக் காணும் போது மனத்தில் எல்லையில்லாத கலக்கம் உண்டாகிறது. இறைவனின் நீதி முறையைப் புரிந்து கொள்ளவொண்ணாமல் சஞ்சலம் அடைகிறோம்.

ஆயின், ஆண்டவனின் லீலா விநோதங்களை யாரே பகுத்துப் பார்த்துப் புரிந்து கொள்ள இயலும்? உத்தமர்களின் உயிர்த் தியாகத்தின் மூலமே, அவர்களது வாழ்நாள் இலட்சியத்தை நிறைவேற்றி வைப்பது இறைவன் திருவுள்ளம் போலும். தனக்காக வாழாதவர்கள் தரணிக்காகவே தம் இன்னுயிரையும் ஈந்து, உலகின் நினைவில் என்றும் சிரஞ்சீவிகளாகத் திகழ்ந்து, துருவமாக வழி காட்ட வேண்டும் என்பது தெய்வம் வகுத்த விதி போலும்!



கிடைத்தற்கரிய அந்த விதிக்கு ஆளாகி முப்பத்தொன்பதாம் வயதிலேயே பிராணத் தியாகம் புரிந்து புவிக்குளே முதன்மை அடைந்துவிட்டார் மார்டின் லூதர் கிங்.

'கிங்' என்று பெயர் படைத்த அவர் அதிகார பீடத்தில் வீற்றிருந்து அரசனாக ஆட்சியோச்சவில்லை; ஆனால் மனிதத் தன்மையில் ஒரு மன்னனாக விளங்கியதால்தான் இன்று பேரரசரும் பெறாத வகையில் உலகின் புகழ் மாலையை, வணக்கத்தை, கண்ணீரைப் பெறுகிறார்.

காந்தியடிகளின் அஹிம்சா மார்க்கத்துக்கும், சத்தியாக்கிரகப் போராட்டத்துக்கும் ஓர் அற்புத வாரிசாக அமெரிக்காவில் தோன்றிக் கருப்பரின் உரிமைகளுக்காக அமைதி யுத்தம் நடத்தி, முப்பத்தைந்தாம் பிராயத்திலேயே சமாதானத்துக்கான நோபல் பரிசைப் பெற்றவர் மார்டின் லூதர் கிங். ஆனால் அதைவிடப் பெரிய பரிசாகக் கென்னடியின் அரசாங்கமும், ஜான்சனின் அரசாங்கமும் நீக்ரோக்களின் சம உரிமைக்காகப் பல நல் முயற்சிகளை எடுத்தன. எனினும் அரசாங்கத்தின் நடவடிக்கைகளை விட, மக்களின் மனமாற்றத்தையே பெரிதாக மதித்த கிங் விடாமல் பல அமைதி அணிகளை நடத்தி வந்தார்.

அன்பு இறுதியில் வெற்றி பெறுவது திண்ணமே எனினும், துவேஷமும், மாற்சரியமும் மிகுந்த உலகில் அதன் போக்கு மெல்ல மெல்லவே முன்னேற முடிகிறது. கிங்கின் வாழ்வுக்கு ஆபத்து ஏற்படும் சூழ்நிலை முற்றி வந்தது. சில ஆண்டுகளுக்கு முன் அவர் வீட்டின் மீதே குண்டு வீசப்பட்டது. அப்படியும் அவர் தளரவில்லை. அவருக்கு வாய்த்த வாழ்க்கைத் துணைவியாரும் அவரது உறுதிக்கு உறுதுணையாக இருந்தார். 'ஆண்டவன் காப்பது திண்ணம். ஆனும் காப்பு என்பது

உடலைக் காப்பது என்று சொல்ல முடியாது. ஒருவேளை ஒருவரது உயிர்ப் பலியின் மூலமே அவருடைய இலட்சியத்துக்கு ஆண்டவனின் காப்பு கிடைக்கக்கூடும். எனவே, உயிருக்கு அஞ்சி இயக்கத்தை விடுவதற்கில்லை. ஏனெனில், மரணத்துடன் ஒருவரின் போராட்டம் முடிந்து விடாமல் மரணத்துக்குப் பின்னால் ஒருவரது செல்வாக்கு உயர்ந்தாலும் உயரக்கூடும்' என்ற திடசங்கற்பத்துடன் கிங் தம்பதியர் தமது இலட்சியத்துக்காக உயிரைப் பணயம் வைத்துப் போராடினர். இது இந்த நூற்றாண்டில் நம் கண்முன் நடந்த மகா காவியம். கிங்கின் மரணத்துக்குச் சில தினங்கள் முன்பு அவரது மனைவியார் அளித்த ஒரு பேட்டியில் இவ்விஷயங்களைத் தெளிவுடன் கூறி, கணவர் கொலையாவதற்கு எந்த நிமிடமும் தம்மைத் தயார்ப் படுத்திக் கொள்வதாகச் சொல்லியிருப்பது இன்று நமக்கு ரோமாஞ்சனத்தை உண்டாக்குகிறது.

கிங் தம்பதியருக்கு ஆண்டவனிடம், அன்பு வழியிடம், அஹிம்சா மார்க்கத்திடம் இருந்த நம்பிக்கையே இன்று உலகைச் சூழ்ந்துள்ள துவேஷ இருளுக்கிடையே ஓர் ஒளிச் சக்தியாக வியாபிக்குமாக! கிங்கின் கோர மரணத்தை அடுத்து அமெரிக்காவில் தற்போது அமளிகள் பரவலாக ஏற்பட்டுள்ள போதிலும், அப்புனிதரின் ஆன்ம சக்தியால் பகை யெனும் பேய் விரட்டப் பட்டு, அன்பு வழியில் அனைவருக்கும் சம உரிமை நிலைநாட்டப்படும் என்று நம்புவோமாக. தற்போது அமெரிக்க வெள்ளையரிடம் தோன்றியுள்ள வெட்க உணர்ச்சியும், பச்சாத்தாபமும் நீக்ரோக்களுக்கு இதுகாறும் மறுக்கப்பட்ட உரிமைகளை நிச்சயம் பெற்றுத் தரும் என்பதற்குச் சான்றாக, இப்போதே நீக்ரோக்கள் தங்களுக்கென்று ஒதுக்கப்பட்ட சேரிகளை விட்டு மற்றோர் வாழும் இடங்களில் அவர்களிடையே வசிப்பதற்குச் சட்டம் செய்யப்பட்டுள்ளது. கிங் மரணமுற்றுப் பத்து நாட்களுக்குள் நிகழ்ந்துள்ள அதிசயம் இது!

உலகம் செய்யும் பிழைகளுக்கெல்லாம் கழுவாயாகத் தமது உயிர் ஈந்த உத்தமர்களின் வரிசையில் இடம் கொண்டுவிட்ட மார்டின் லூதர் கிங்கின் நினைவுக்குச் சிரம் தாழ்த்தி அஞ்சலி அளிக்கிறோம்.

# என்ன சேதி?

## கம்யூனிஸ நாடுகளில் கிளர்ச்சி

கிழக்கு ஐரோப்பாவில் உள்ள போலந்து, செக்கோஸ்லேவேகியா, ருமானியா முதலிய கம்யூனிஸ நாடுகளில், கட்டுக்கோப்புக் குலைந்து அங்கெல்லாம் கம்யூனிஸக் கொள்கையே ஆட்டம் கண்டிருக்கிறது. உண்மையான சுதந்திர ஜனநாயக உணர்ச்சிக்கு ஆக்கமும் பலமும் ஏற்பட்டு வருகிறது. பேச்சுச் சுதந்திரமும் தனி நபர் சுதந்திரமும் கோரி வருகின்றனர். அரசாங்கத்துக்கு மாறுபட்ட கருத்துக்களை வெளியிட உரிமை கோரிக் கிளர்ச்சிகள் நடைபெறுகின்றன.

> ''தனியார்களுக்குச் சொந்தமாக இருந்த சிறு வர்த்தக ஸ்தாபனங்களை அவர்களிடமே திருப்பிக் கொடுத்துவிட வேண்டுமென்ற குரல்கள் எழுப்பப்பட்டிருக்கின்றன.
>
> ''ஐம்பதுக்குக் குறைவானவர்களுடன் நடத்தப்பட்டு வந்த தனியார் நிறுவனங்களைச் சர்க்கார் தம்முடைய ஆதிக்கத்திலிருந்து விடுவித்து, சொந்தக்காரர்களிடம் தந்துவிட வேண்டும் என்று கோரப்பட்டிருக்கிறது.''

இப்படியெல்லாம் செக்கோஸ்லாவிய மக்களின் கிளர்ச்சிகளும் கோரிக்கைகளும் எழுந்துள்ளன.

எதையும் சர்க்கார் உடைமையாக்க வேண்டும், பஸ் போக்குவரத்து, சினிமாத் தியேட்டர்கள், சினிமாப் படம் எடுக்கும் ஸ்டுடியோக்கள் — எதுவானால் என்ன? அவற்றைச் சர்க்கார் எடுத்துக் கொண்டுவிட வேண்டும் என்று துடிப்பவர்கள், ஐரோப்பிய கம்யூனிஸ நாடுகளில் உள்ள மக்கள் இப்பொழுது என்ன நினைக்கிறார்கள் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். சோஷலிஸம் முற்போக்கான கருத்தல்ல இன்று. அதைப் பற்றிப் பேசுபவர், இன்று உலக சிந்தனை — முற்போக்குச் சிந்தனை எந்தப் பக்கம் போகிறது என்று தெரியாத 'பத்தாம் பசலி' என்று தான் சொல்ல வேண்டும்.

## ரஷ்யாவில் "லாப நோக்கு"

நாட்டில் பொருளாதார சுபிட்சம் காண வேண்டுமானால், உற்பத்தியில் ஈடுபட்டவர்களுக்குப் பிரத்தியேக லாபம் இருக்க வேண்டும். தனி மனிதனின் லாப உணர்ச்சிக்கு மதிப்பளித்தால் உற்பத்தி பெருகும் என்று சுதந்திரக்கட்சி ஆரம்பத்திலிருந்து சொல்லி வந்திருக்கிறது.

லாப நோக்கமே பாவம் என்று கருதிவந்த சோஷலிஸ ருஷ்யா, இந்தக் கொள்கையைச் சிறிது கைவிட்டு, தொழில் துறையில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்கள், மானேஜர்கள் ஆகியவர்களுக்கு அதிக உற்பத்தியைக் காண்பித்தால் அதற்குத் தகுந்த லாபம் அவர்களுக்குத் தரப்படும் என்று இரண்டொரு ஆண்டுகளுக்குமுன் அறிவித்தது. ரஷ்யாவில் மொத்தம் 44,000 தொழிற்சாலைகள் உள்ளன. அவற்றில் கால் பங்கு—10,000 தொழிற்சாலையில் 'லாப நோக்கு'' என்று புதிய முறை புகுத்தப்பட்டது.

அதன் விளைவு என்ன தெரியுமா ?

''ரஷியாவின் தொழில் துறை உற்பத்தியில் சுமார் ஐம்பது சத விகிதம், 'புதிய பொருளா

தாரத் தூண்டுதல் திட்டத்தின்கீழ் இயங்கும் தொழிற்சாலைகளிலிருந்து வருவதாக மாஸ்கோவின் ''பொருளாதார கெஜட்'' என்னும் சஞ்சிகை தெரிவித்துள்ளது. மேலே கூறப்பட்ட புதிய திட்டம் மேற்கத்திய நாடுகளில், ''லாப நோக்கு முறை'' என்று கூறப்படுகிறது.''

தொழில்துறையில் கால் பகுதியில் லாப நோக்கை நுழைத்ததும் அதுவே நாட்டு உற்பத்தியில் சரி பாதியைக் கொடுக்கிறது என்றால் முழு அளவுக்கு லாப நோக்கை அனுஷ்டித்தால் நாட்டில் சுபிட்சம் எவ்வளவு இருக்கும் என்று சொல்லத் தேவையில்லை.

## ஆரணி தேசபக்தர்

ஆரணி தேசபக்தர் டபிள்யூ. எஸ். சீனிவாச ராவ் ஐயர் என்று காலமான செய்தி கேட்டு அதிர்ச்சியடைந்தோம். காந்தி மகான் தொடங்கிய சுதந்திரப் போராட்டங்களில் தீவிரமாகக் கலந்து கொண்டு நான்கு முறை சிறை சென்ற தேசபக்தர் அவர். சென்னை சட்டசபைகளில் அங்கம் வகித்துப் பணியாற்றியிருக்கிறார். ராஜாஜியின் தலைமையில் தளரா நம்பிக்கை கொண்டு அவரையே கடைசி வரையில் பின்பற்றி வந்திருக்கிறார். ராஜாஜி சுதந்திரக் கட்சியை ஆரம்பித்த போது, அவரும் காங்கிரஸை விட்டுச் சுதந்திரக் கட்சியில் சேர்ந்து பணியாற்றினார். அவர் தமது தன்னலமற்ற தேசப் பணியினால் வட ஆர்க்காடு ஜில்லாவில் எல்லா மக்களின் பேரன்பையும் பெருமதிப்பையும் பெற்றிருந்தார். அதனால்தான் அவர் காலமான செய்தி கேட்டதுமே ஆரணியில் கடைகளையெல்லாம் சாத்தி மக்கள் அவருக்கு இறுதி மரியாதை செலுத்தினர் !

## சர்க்கரை மாநாடு

இந்திய சர்க்கரை ஆலைகள் சங்கம் பிரபல சென்னைத் தொழில் அதிபர் ஸ்ரீ டி. வி. கோத்தாரி அவர்களை நடப்பு ஆண்டுக்குத் தலைவராக ஏகமனதாகத் தேர்ந்தெடுத்து, அவரைக் கௌரவித்ததுடன், தன்னையும் சிறப்பித்துக் கொண்டுள்ளது. ஸ்ரீ டி. வி. கோத்தாரியின் தொழில் சேவை பல துறைகளில் வியாபித்துள்ளது. பஞ்சாலை, தோட்டத் தொழில், ரசாயன உரம், கட்டடத் தொழில், முதலீட்டுத் தொழில் — இப்படிப் பல தொழில்களில் ஈடுபட்டுள்ள அவர், பல கமிட்டிகளிலும், குழுக்களிலும் அங்கம் வகித்து, அரசினர் விரும்பும்போதெல்லாம் அவர்கள் ஏற்றுக் கொண்டாலும் தள்ளினாலும் ஆலோசனைகளை வழங்கி வருகிறார். சர்க்கரைத் தொழிலில் சுமார் 1960ம் ஆண்டிலிருந்துதான் அக்கறை கொண்டிருக்கிறார் என்றாலும் அவருடைய தொழில் அறிவு முதிர்ச்சியால் இவ்வளவு சீக்கிரத்தில் உயரிய இடம் பெற்றுள்ளார். ஏப்ரல் 17ந் தேதி ஜெனிவாவில் நடைபெறும் சர்வ தேச சர்க்கரை மகாநாட்டில் இந்தியாவுக்கு இப்போதுள்ள இரண்டரை லட்சம் டன் ஏற்றுமதி வாய்ப்புக்களைக் குறைந்த பட்சம் நான்கு லட்சம் அல்லது ஐந்து லட்சம் டன் அளவுக்காவது உயர்த்த அவர் முயற்சி எடுத்துக் கொள்வார் எனத் தெரிகிறது. விலை விஷயத்திலும் அவர் பிடிவாதத்துடன் வாதாட வேண்டியிருக்கும். இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் சர்க்கரையின் விலை மற்றப் பல நாடுகளில் தயாராகும் சர்க்கரையின் விலையைவிட மிகவும் அதிகம். இப்போது உலக மார்க்கெட்டில் நிலவும் சர்க்கரை விலைகளும், உடன்படிக்கை ஷரத்துக்களும் நம் நாட்டுக்கு லாபகரமாக இல்லை. அபிவிருத்தி



யடைந்து வரும் நாட்டின் ஏற்றுமதியை அதிகரிக்க முன்னேற்ற மடைந்த நாடுகள் எல்லா வகையிலும் உற்சாகம் காட்ட வேண்டும் என்று சமீபத்தில் புதுடில்லியில் நடைபெற்ற ஐ. நா. வர்த்தக அபிவிருத்தி மகாநாடு வற்புறுத்தியது. இதையெல்லாம் கருத்தில் வைத்து டன்னுக்கு 43 முதல் 48 பவுண்டு வரையில் ஏற்றுமதி விலை கிடைக்க வேண்டும் என்று அவர் மகாநாட்டில் வாதாட வேண்டியிருக்கும். இந்தச் சிரமமான காரியத்தில் தீரத்துடன் ஈடுபடவிருக்கும் அவரை வாழ்த்துகிறோம்.

## வாக்காளர் கவனத்துக்கு

பம்பாய் நகரசபைத் தேர்தலில் சிவசேனை பெருத்த வெற்றி பெற்றிருக்கிறது. குறுகிய பிரதேச அடிப்படையிலும், ஒரு வகுப்பின் அடிப்படையிலும் அமைந்த அரசியல் கோஷ்டிகளுக்கு உள்ளூர்ப் போட்டிகளில் எளிதாக ஜயம் கிடைத்து விடுகிறது. தேசம் முழுவதையும் தழுவும் கொள்கை உடையவர்களோ — அவர்கள் கம்யூனிஸ்டுகளாயினும் சரி, காங்கிரஸாயினும் சரி, சுதந்திரக் கட்சியினராயினும் சரி — ஊராட்சித் தேர்தல்களில் அற்பக் கவனத்தையே பெறுகின்றனர். வாக்காளர்கள் இக்கட்சியினரிடம் கவனம் செலுத்தினாலும் கூட, அவர்களிடம் வெறுமனே மரியாதை மட்டும் செலுத்திவிட்டுத் தங்களது வாக்கைக் குறுகிய பிரதேசக் கொள்கைக்காரருக்கோ, வகுப்புவாதிகளுக்கோ போடுகிறார்கள்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

டாக்டர் மார்டின் லூதர் கிங் கொலையானதைப் பார்க்கும்போது தீமை என்பது ஒரு நெருக்கடியாக முற்றி நம்மை நோக்கி வேகமாக வருவதாகத் தோன்றுகிறது. ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே ஒற்றுமை ஏற்படுத்துவதற்காக இந்தியாவில் காந்திஜி செய்த உயிர்த் தியாகத்துக்குச் சமமான ஒன்றை அமெரிக்காவிலும் உலகம் கண்டுவிட்டது. இதற்கு ஒரிரு தினங்களுக்கு முன்புதான் மார்டின் லூதர் கிங்கின் மரணத்துக்கு அவரது மனைவியார் தயாராகி வருவதாக ஓர் அமெரிக்கப் பத்திரிகையில் படித்தேன். அது இவ்வளவு சீக்கிரத்தில் இவ்வளவு உண்மையாகி விடும் என்று நான் எதிர்பார்க்கவில்லை.

கிங் மரணத்தை அடுத்து அமெரிக்காவின் பல நகரங்களில் கலகம் ஏற்பட்டது. ஆத்திரப்படுவது சுலபம். அதிலும் இன்றையச் சூழ்நிலையில் வெள்ளையரை விட நீக்ரோக்களுக்கு மிகவும் சுலபம். பொறுத்துக்கொள்வதும் மன்னிப்பதும் கஷ்டம். ஆனால் இவையே பின்பற்ற வேண்டியவை. ஆண்டவன் வாக்களித்துள்ள பொன்னாட்டுக்குச் செல்லும் வழி செங்குத்தானது. ஆத்திரம் என்கிற மனித மனத்தின் ஒழுங்கீனமோ நம்மைக் கீழ் நோக்கி இழுத்துச் செல்கிறது.

மார்டின் லூதர் கிங் கொலையுண்டதை யொட்டி அமெரிக்காவில் தேசிய ரீதியில் துக்கம் காக்கப்பட வேண்டும் என்று அமெரிக்க அரசாங்கம் உத்தரவிட்டிருப்பது உலகத்தின் பாராட்டுக்குரியது. சமாதானத்துக்காகவும் நல்லெண்ணத்துக்காகவும் உழைத்த ஒருவரை ஒரு வெள்ளையன் கொலை செய்திருக்கிறான். பேடித்தனமாக இந்தத் தீய காரியம் செய்தவன், தான் ஏதோ மகத்தான நன்மை செய்வதாகக் கற்பனை செய்துகொண்டு இச்செயலைப் புரிந்திருக்கிறான். இதை அடுத்து மூண்ட கிளர்ச்சிகளைக் கட்டுப்படுத்துவதில் ஜான்சன் வெற்றி கண்டுள்ளார். ஒருவன் செய்த கொலைக் குற்றம், மற்றவர்களிடம் துவேஷப் போர்ச் சக்திகளை வலுப்படுத்தாதபடி அதனைக் கட்டுப்படுத்துவதும், நல்லெண்ணத்தின் வழியே சமாதானத்தை அடையப் பாடுபடும் ஓர் இயக்கத்தை ஆரோக்கிய நிலையில் காப்பதும் மகத்தான பணியாகும்.

ஃ ஃ ஃ

இயற்கையிலேயே சில காரியங்கள் எளிதானவை; சில கடினமானவை; பொறுமை, கோபம் இவற்றைத் தூண்டி விடுவது எளிது. கட்டுப்படுத்துவதும், கல்வியறிவு புகட்டுவதும் கடினம். புரளியைப் பரப்புவது சுலபம். ஆனால் பொய்யின் சிக்கல்களை இழை பிரித்துக் காட்டி, சத்தியத்தைப் பரப்புவது கஷ்டம். 'சுதந்திரக் கட்சிக்குச் சக்தி வாய்ந்த தொண்டர் படை இல்லை; ஊர் தோறும் தொண்டர் படை திரட்டுவதில் கட்சி வெற்றி பெறவில்லை' என்று அடிக்கடி சொல்லப்படுகிறது.

மற்றக் கட்சிகளில் பரவலாக உள்ள இத்தொண்டர்கள் யார்? அவர்கள் செய்யும் வேலை என்ன? அந்த வேலையின் தன்மையில் சுதந்திரக் கட்சிக்கு என்ன குறை இருப்பதால், அதனால் மற்ற கட்சிகளுடன் போட்டியிட முடியவில்லை?

மற்றக் கட்சித் தொண்டர்களின் வேலையானது துவேஷத்தையும், பொறாமையையும் வகுப்புப் பகைமைகளையும் பரப்புவதே. இதற்கு எதிரிடையாக வேலை செய்வது கடினம். இக் கடினப் பணி செய்வதற்கு உயர்ந்த பண்பும், கருதிகளும் படைத்தவர்கள் தேவை.

சுதந்திரக் கட்சி மக்களைத் தன்பால் திருப்பிக் கொள்ளும் இலட்சியம் இரண்டு விஷயங்களைச் சார்ந்தது. ஒன்று, மக்களிடம் பொருளாதார அறிவு பரவுவது; இரண்டு எல்லா மதங்களையும், வகுப்புக்களையும், விசால மனப்பான்மையுடன் நோக்குவது. இதற்காகத்தான் காந்திஜி வாழ்நாள் முழுதும் உழைத்தார்.

சிறந்த குறிக்கோளை அடைவதற்காகத் தோல்விகளையும் ஏமாற்றங்களையும் பொறுமையுடன் தாங்கிக் கடினமாக உழைப்பதில் பெருமை உண்டு. இறுதியில் உண்மையான நாட்டு முன்னேற்றத்துக்கு உதவாத வகையில் பெறும் வெற்றியில் பெருமை இல்லை. நாம் மேற்கொண்டுள்ள சரியான பாதையில் தளராமல் உழைப்போம். 'தொண்டர்கள்' எனப்படுபவர்கள் மட்டும் இருந்தால் போதாது. 'போதகர்கள்' — வழி சொல்லிக் கொடுப்பவர்கள்தான் நமக்கு வேண்டும். அரசியல் என்பது நல்லறிவு புகட்டும் கல்விப் பணி. புது சாதிகளையும் குருட்டுப் பற்றுதல்களையும் உண்டாக்குவதல்ல.

ஃஃஃ

கொச்சி யூத தேவாலயத்தினர் நடத்தவிருக்கும் கண்காட்சியில் யூதப் பாதிரியார் ஒருவரால் கொச்சியில் அச்சிடப்பட்ட தமிழ் நூலொன்று இடம் பெறும். ஏறக்குறைய காக்ஸ்டன் தமது முதல் புத்தகத்தை லண்டனில் அச்சிட்ட அதே சமயத்தில்— அதாவது ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு இத்தமிழ் நூல் அச்சாகி யிருந்திருக்கிறது.

இது ஒரு ருசிகரமான பத்திரிகைத் தகவல்.

ஃஃஃ

வியட்நாம் சூழ்நிலை நான் பயந்ததைவிட நல்ல நிலையில் இருப்பதாகத் தோன்றுகிறது. அறிவுக்குப் பொருந்திய விதத்தில், பாதுகாப்பான முறையில் வியட்நாமில் சமரசம் ஏற்பட வாய்ப்பு இருப்பதாகத் தெரிகிறது. ஜனாதிபதி ஜான்ஸனின் இறுதி அபிலாஷை யாதாயினும் சரி, இப்போதைக்கு ஓர் அடி முன்னேறுவதிலேயே அவர் திருப்தி காணலாம் என்று எண்ண இடமுள்ளது. சமரச வாய்ப்பு நாசமடையும் அளவுக்குச் சீனத்

தின் செல்வாக்கு ஓங்கிவிடாது என்று தோன்றுகிறது.

ಃಃಃ

அணு ஆயுதப் பரவலைத் தடுக்கும் ஒப்பந்தத்துக்கு ஆதரவு அளிக்காமல் இருக்கும் இந்திய சர்க்காரின் மனப்போக்கை ஏற்றுக் கொள்ள முடியவில்லை. பாதுகாப்புக்காக ஒருபோதும் பயன்படுத்திக்கொள்ள முடியாதவை அணு ஆயுதங்கள். எதிரியை அச்சுறுத்தவே அணு ஆயுதங்கள் பயனாகின்றன. அமெரிக்கா, ருஷ்யா போன்ற நாடுகள் ஏராளமாக அணு ஆயுதங்களைக் குவித்திருக்கும்போது, அணு ஆயுதத்தின் மூலம் அச்சுறுத்தும் சக்தியும் மற்ற நாடுகளுக்குக் குறைகிறது. அணு ஆயுத உற்பத்திக்கான செலவை இந்தியா ஏற்பதென்பது எண்ணிப் பார்க்கவும் முடியாத விஷயம். இவ்வாயுதத்தைத் தயாரித்த பின் அதை உபயோகிப்பதில் உள்ள இடர்ப்பாடுகளையும் இந்தியா ஏற்பதற்கில்லை.

சீனத்தின் பேராசையை மையமாகக் கொண்டு இந்தியாவுக்கு ஆபத்து எழுந்துள்ளது. சீனம் தனது சாம்ராஜ்யத்தை விஸ்தரிக்கும் என்பதே நமது பயம். ஆயினும் இவ்விஸ்தரிப்பில் ஈடுபடுவதற்கு இந்தியாவுக்கெதிராக அணு ஆயுதத்தைப் பயன்படுத்துவது சாத்தியமல்ல. சம்பிரதாயமாகி விட்ட பழைய தந்திரங்களையும் பழைய ஆயுதங்களையும் கொண்டுதான் சீனம் ஆட்சி விஸ்தரிப்பில் ஈடுபடும். எனவே இவ்வம்சத்தில் சீனத்திடம் அணு ஆயுதம் இருப்பதை நாம் புறக்கணித்து விடலாம். இங்கு கூறப்பட்டிருப்பது இன்றைய நிலவரம், எதிர்காலத்தில் ஏற்படக் கூடிய போக்கு இவற்றைக் குறித்த சரியான மதிப்பீடாயின், நாம் அணுகுண்டு தயாரிப்பதற்கு உரிமை கோருவதில் பொருள் இல்லை என்று புரியும்.

அணு ஆயுதங்களை முற்றிலும் ஒழித்துக் கட்டி, கையில் குவிந்துள்ள அணு ஆயுதங்களையும் அற்றுப் போகச் செய்வதே சிக்கலைத் தீர்க்கும் ஒரே உபாயம் என்பதை அமெரிக்காவுக்கும் ருஷ்யாவுக்கும் உணர்த்த வேண்டியதே நம் பணி. இதற்காக நாம் சமாதானத்தை விரும்பும் மற்ற நாடுகளுடன் இடையறாமல் முயல வேண்டும். இன்றைய நிலையில் இந்த இலட்சியத்தை நாம் அடைய முடியாமல் இருக்கலாம். எனினும் இப்போதுள்ள அளவோடு சைத்தானின் ஆயுதங்களைக் கட்டுப்படுத்தும் ஓர் உடன்படிக்கைக்கு நாம் முட்டுக்கட்டை போடுவதால் ஒரு லாபமும் விளையாது. 'சிலருக்கு மட்டும் அணு ஆயுதத்தில் ஏகபோக்கியமா?' என்ற கோஷத்தை எழுப்பி, நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதில் அர்த்தமில்லை. சில விஷயங்களில்தான் ஏக போக்கியத்தை எதிர்ப்பது சரியாகும். ஆபத்தான ஒரு விஷயத்தில் ஏகபோகம் கூடாதென்று கூறி, அனைவரும் ஈடுபடுவதால் இன்றுள்ளதைவிட நிலைமை மோசமேயாகும். இதைத் தடுப்பதற்கு நம்மால் இயன்ற அனைத்தும் செய்தாக வேண்டும். தீமையை எவ்வளவுக்கு முடியுமோ அவ்வளவுக்குத் தடுக்க வேண்டுமே ஒழிய, இதில் யாருக்கும் ஏக போக்கியம் கூடாது என்று கூறி, அனைவரும் பங்கு கேட்பது பொருந்தாது.

ಃಃಃ

கடந்த இருபது ஆண்டுகளாக ஒழுக்கக் கட்டுப்பாடு என்ற பெயரில் கருத்து வேற்றுமைகளை அடக்கி ஒடுக்குவதிலும், கட்சிக் கொறடாவைப் பிரயோகிப்பதிலும் வெகுவாகப் பழகி விட்டோம். எனவே நன்னடத்தை என்றாலே சுதந்திரத்தை, அபிப்பிராயத்தை அடியோடு அகற்றி, கட்சியின் முடிவுக்கு அடிபணிவதுதான் என்ற நிலை ஏற்பட்டுள்ளது. இவ்வாறே ஆடு மாடுகளை

## காமகோடியின் கருணைமொழி



ஜீவராசிகளுக்கு உதவிபுரியும் ஜீவாத்ம கைங்கரியம் என்னும் தர்மத்தை அடிக்கடி நினையுங்கள். பஞ்ச பூதங்களாலும், சூரியன் சந்திரன் போன்ற விண்மீன்களாலும், பயிர்ப் பச்சை முதலிய தாவரங்களாலும், விலங்கு பறவை முதலிய ஜீவஜந்துக்களாலும், மனித சமூகத்தாலும் நாம் அடையும் நன்மைகளை எண்ணிப் பாருங்கள். அவற்றுக்கு நாம் செய்யும் கைம்மாறுதான் என்ன? நாம் தனிமனிதர்களாகப் பிறந்து வளர்ந்து சாகவில்லை; சமூகத்திலே பிறந்து வளர்ந்திருக்கின்றோம்; சமூகமே நம்மை வளர்க்கிறது: அச்சமூகத்துக்கு நாம் செய்யும் நன்றி என்ன?

**எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை**
**செய்ந்நன்றி கொன்ற மகற்கு**

என்கிறது குறள். நாம் பெறும் நன்மைகளுக்கெல்லாம் கைம்மாறு ஜீவாத்ம கைங்கரியமேயாகும். இரவில் படுக்கும்பொழுது ஒரு கேள்வியைக் கேட்டுக் கொள்ளுங்கள்: 'இன்று நாம் ஜீவாத்ம கைங்கரியம் என்ன செய்தோம்?' என்று. அதன் விடையில்தான் நமது மனிதத் தன்மை நிலைபெறுகிறது.

மேய்ப்பது போல் சுதந்திரக் கட்சியும் செய்ய வேண்டும் என்று அக்கட்சியில் விசுவாசமுள்ள நல்லவர்கள் சிலரும் விரும்புவதை நான் அறிவேன். மற்ற கட்சிகளிலிருந்து சுதந்திரக் கட்சியைத் தனிப்படுத்திக் காட்டும் முக்கிய அம்சத்தை மறந்ததாலேயே இந்த எண்ணம் ஏற்பட்டிருக்கிறது. சுதந்திர உணர்வைக் காப்பதே சுதந்திரக் கட்சியின் முக்கிய கொள்கை. கட்சியின் அடிப்படைக் கோட்பாடுகள் தவிர மற்ற இனங்களில் இயன்ற அளவு கருத்துச் சுதந்திரம் தர வேண்டும் என்பதே இக்கட்சியின் விசேஷ அம்சம். சுதந்திரக் கட்சியை ஒரு குருட்டுக் கூட்டமாகச் செய்துவிடலாகாது. சுதந்திரக் கருத்துக்களைக் கொண்டிருப்பதும், சுதந்திரமாகப் பேசுவதும் கட்சியின் கட்டுக்கோப்புக்கு ஊறு உண்டாக்கும் எனப் பயப்படாமல் இருப்போம்.

ஃஃஃ

காந்திஜியின் மதிப்புக்குரிய திரு உருவத்தைப் பொறித்து ரூபாய் நோட்டுக்கள் வெளியிடவிருக்கிறார்கள். பட்ஜெட்டில் விழும் துண்டை ஈடு செய்வதற்காக அச்சடிக்கும் நோட்டில் காந்தியடிகளின் உருவத்தைப் பொறிப்பதால் பண வீக்கத்தின் விளைவில் மாறுதல் ஏற்பட்டு விடாது. அல்லது ரூபாய் நோட்டில் உருவம் பொறிக்கப்படுவதால் பிதாவின் புகழொளியும் அதிகமாகிவிடாது.

இன்று நாம் அயல் நாடுகளுக்கு ரூ. 4,633 கோடி கடன்பட்டுள்ளோம். மொத்தம் பொதுக்கடனே இதைப் போல் மும்மடங்கு. இதற்கு வட்டியும் செலுத்தியாக வேண்டும். காந்திஜி உயிர்ப் பலியான ஆண்டில் ஓர் ஏழை மூன்றணாவுக்கு வாங்கிய அதே பண்டங்களுக்கு இன்று ஒரு ரூபாய் விலை தர வேண்டியுள்ளது. இப்படிப்பட்ட மதிப்பிழந்த ரூபாய் நோட்டில் காந்திஜியின் தலையை அச்சிடுவதால் அவருக்கு மரியாதை செலுத்தியதாகவோ, அவரது நினைவு நம்மைச் செயலில் தூண்டிவிடச் செய்வதாகவோ ஆகாது. அவர் போதித்த வழியில் உண்மையாகவே காரியங்களைச் செய்வதுதான் அவருக்கு அஞ்சலியாகும்.

பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்குமிடையே உள்ள எல்லா வர்த்தகத் தடைகளையும், தொடர்புத் தடைகளையும் வரிச் சுவர்களையும், சுங்கங்களையும் நீக்குவோமாக. இரு நாடுகளையும் ஒரு பொதுவான நட்புக் கொண்ட பொருளாதார — தொழிலுற்பத்தி அமைப்பாக உருவாக்குவோமாக. இப்படிச் செய்தாலே காந்திஜியின் போதனைகளை நாம் நம்மிடையே உயிரோடு காப்பதோடு, ஏனைய உலகத்துக்கும் அவற்றைக் காத்துக் கொடுத்தவராவோம். பழைய இந்தியாவின் பிளந்த இரு கூறுகளை மீண்டும் இசைவிப்பதில் ஈடுபடுவோம். இந்தக் கூறுகள் ஒன்றோடொன்று உரசிக் கொண்டு உஷ்ணமும் நெருப்பும் உண்டாக்குவதைத் தடுத்து நிறுத்துவோம். பிரச்னைகள் முடிச்சுக்களாக இறுகிக் கொண்டு போய் நம்மைப் பயமுறுத்துகின்றன. முடிச்சுக்களை ஒவ்வொன்றாக அவிழ்ப்போம். நல்லதிருஷ்டத்தை அடைவோம். இரு நாடுகளாகச் சேர்ந்து செய்யும் பொது முயற்சி ஒவ்வொன்றும் அறிவற்ற துவேஷத்தின் மீது எழுப்பிய கல்லறையாகும்.

ஃஃஃ

உலக அரசாங்கம் என்ற இலட்சியம் நனவாகாமல், தேசியம் என்பது எங்கணும் வலுப்பட்டு வரும் சூழ்நிலையில் வாழும் வரையில் மக்கள் ஆக்கிரமிப்பை எதிர்த்து உயிரையும் விடுவதற்குப் பழக வேண்டும். செல்வ வளத்தோடு சௌகரியமாக வாழ்வதற்கு மக்கள் முயன்றால் மட்டும் போதாது. கூடியவரையில் காந்திய வழியில் அஹிம்சை மூலம் ஆக்கிரமிப்பை எதிர்த்து உயிரையும் விட மக்கள் பயில வேண்டும். அஹிம்சை வழி முடியாவிடில், நீண்ட கால வழக்கப்படி ஆயுதத்துக்கு எதிராக ஆயுத பலம் காட்டித் தீமையை எதிர்க்க வேண்டும். தீமைக்கு அடிபணிந்து போரை விலக்கினால் அது சமாதானத்துக்கு ஆற்றிய பணியாகாது. மாறாக வன்முறைக்கு ஊக்கம் தந்ததாகவே ஆகும். கௌரவம் உள்ள வரையில் நாம் உயிர் வாழ வேண்டியது எவ்வளவு இரமமானதோ, அதேபோல அவசியம் ஏற்படுகையில் உயிர் விடுவதும் முறையாகும். எனவே எப்படி இறப்பது என்பதும் ஒருவர் பெற வேண்டிய கல்வியின் ஓர் அங்கமாகும். நாம் உணவூட்ட வேண்டிய வாய்களின் எண்ணிக்கையைக் கருத்தடையால் குறைப்பதை விடத் தீமையை எதிர்த்து உயிரையும் கொடுக்கப் பழகுவதற்கே முதலிடம் தர வேண்டும்.

அட்டைப்பட விளக்கம்

# பெற்ற பாசத்தின் பிணைப்பு!

முன்பெல்லாம் தனிமையில் இனிமை காண அவனால் முடிந்தது. அவளைச் சந்தித்த பிறகு, முன்பு இனிமையாயிருந்த தனிமை ஒரே கொடுமையாக மாறி அவனைத் துன்புறுத்தியது. சந்திப்பை அதிகப்படுத்திக் கொண்டான். அவள் மறுப்பு தெரிவிக்கவில்லை. நாளடைவில் கொழுகொம்பை நோக்கிப் பசுங்கொடி தாவிப் படர்ந்தது; தனித் தனியாயிருந்தவர்கள் இணைந்து ஒன்றுபட்டார்கள். அதன் பலனாக இருவரையும் உரித்துக் கொண்டு ஒரு புதிய ஜீவன் உதயமாயிற்று.

அவர்களையும் அறியாமல் ஒரு பாசம் பிறந்தது. பாசத்தின் சக்தியினாலேயே அவள் பாலகனின் கரம் பற்றி, மரங்கள் அடர்ந்த பாதையில் அடியெடுத்து வைத்து நடக்கலானாள். பெற்ற பாசத்தின் அதே பிணைப்பில் கட்டுண்டு அவனும் அவளுடன் நடக்கலானான்; வாழ்க்கைப் பாதையிலும் முன்னேறினார்கள்.

"மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலன் நன்மக்கட் பேறு"

என்னும் வள்ளுவர் வாக்கை இந்த இதழ் அட்டையில் படம் பிடித்துக் காட்டியிருக்கிறார் புகைப்படக் கலைஞர் ரவீந்திரபல்லா.




ஐக்கிய நாடுகள் சபை அரங்கத்தில் 1966 அக்டோபர் 23ந் தேதி அன்று ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி நிகழ்த்திய கச்சேரியின் ரிகார்டுகளை ஐ. நா. சபை காரியதரிசி ஊதாண்ட் அவர்களுக்கும், இந்தியப் பிரதிநிதி திரு ஜி. பார்த்தசாரதி அவர்களுக்கும், ஐ. நா. சபையின் உதவிக் காரியதரிசி திரு ஸி. வி. நரஸிம்மன் அவர்களுக்கும் மார்ச் 29-ந் தேதியன்று ஐ. நா. சபை தலைமைக் காரியதரிசி அறையில் கிராமபோன் கம்பெனியைச் சேர்ந்த க்ரிஸ் பீட்டர்ஸ் வழங்கினர். அந்த இன்னிசை ரிகார்டுகளை மகிழ்ச்சியுடன் பெற்றுக்கொண்டு மூவரும் காட்சியளிப்பதைப் படத்தில் காணலாம்.

# அழியாப் பரிசு

## விளையும் பயிர்

"அம்மா! அப்பா எப்போ வருவார், அம்மா?" என்று கேட்டுக் கொண்டே வீட்டுக்குள் ஓடி வந்தான் சிறுவன் வினோபா.

"எதற்காகக் கேட்கிறாய்?" என்று கைக் காரியமாக இருந்த தாயார் கேட்டாள்.

"அம்மா! தீபாவளிப் பண்டிகை வருகிறதே! அப்பா வந்தால்தானே, கடை கண்ணிக்குப் போய்ப் புதுச் சட்டை, புது வேட்டி, பட்டாசு, தின்பண்டம் எல்லாம் வாங்கலாம்? அடுத்த வீட்டு மாதவனுக்கு அவன் அப்பா இன்றைக்கோ, நாளைக்கோ, கடைக்குப் போய் எல்லாம் வாங்கித் தரப் போகிறாராம். அதற்காகத்தான் அம்மா கேட்டேன்!" என்றான் சிறுவன் வினோபா.

அவன் தந்தை அப்பொழுது பரோடாவில் இருந்தார். ஆண்டுதோறும் தீபாவளியின் பொழுதுதான் அவர் ஊருக்கு வருவது வழக்கம். அவன் கிராமத்தில் தாயாரோடும் சிற்றப்பாவோடும் வசித்து வந்தான். சிற்றப்பா அவனுக்கு 'அரு ஆவன்னு' சொல்லிக் கொடுத்தவர்.

தாயாருக்குத் தன் மகன் நன்றாகப் படிக்க வேண்டும், தந்தையைக் காட்டிலும் கெட்டிக்காரனாக இருக்க வேண்டும் என்று ஆசை. "உன் அப்பா நாளைக்கு வரப் போகிறாரே, உனக்குத் தெரியாதா? இன்று கடிதம்கூட வந்திருக்கிறதே! உனக்கு நல்ல தின்பண்டமாக நிறைய வாங்கி வரப்போவதாக எழுதியிருக்கிறார். நீ சிற்றப்பா சொல்லித் தரும் பாடங்களை யெல்லாம் நன்றாகப் படிக்க வேண்டும். அப்பா வந்து கேட்டால் 'டக் டக்' என்று பதில் சொல்ல வேண்டும். அப்பொழுதுதான் அப்பா சந்தோஷப்படுவார்" என்றாள்.

அம்மா சொன்னபடி அப்பா வந்து விட்டார். பையன் ஆசையோடு அவர் பக்கத்தில் போய் நின்றான். "இந்தா, இது உனக்கு!" என்று கூறி ஒரு பொட்டணத்தை அவன் கையில் கொடுத்தார் தந்தை. அவனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு ஓர் அளவில்லை. பொட்டணத்தோடு அம்மாவிடம் ஓடினான்.

"பார்த்தாயா! நான் சொன்னபடியே அப்பா உனக்கு நல்ல தின்பண்டங்கள் வாங்கி வந்திருக்கிறார்!" என்ற தாயாருக்கும் ஓர் ஆவல். பொட்டணத்தை வாங்கி அவசரம் அவசரமாகப் பிரித்தாள்.

உள்ளே இருந்தவை என்ன, தெரியுமா? இரண்டு புஸ்தகங்கள்! ஒன்று இராமாயணம், மற்றொன்று மகாபாரதம்.

பையன் முகம் கன்றி விட்டது. தின்பண்டங்களைக் காணாத அவன், "என்னம்மா இது?" என்று கேட்டான்.

சட்டென்று சமாளித்துக் கொண்ட அம்மா, "ஒப்பு உயர்வற்ற உண்டிப் பொருள்கள் தான் இவையும். மற்றப் பொருள்களெல்லாம் நாவுக்கு ருசியாக இருக்கும். வயிற்றையும் நிரப்பும். ஆனால் இதுவோ இருதயத்தை விசாலப்படுத்தும்; மூளையை வளர்க்கும். இவற்றைக் காட்டிலும் உயர்ந்த பொருள் உலகத்திலேயே வேறு ஒன்றும் இடையாது! சிற்றப்பாவை வைத்துக் கொண்டு இவற்றை நன்றாகப் படி, பொருளையும் புரிந்து கொள். அப்புறம் படிக்கப் படிக்க இது இனிக்கும். இதைக் காட்டிலும் சுவையான பண்டம் எதுவும் இடையாது என்று நீயே சொல்வாய்!" என்றாள்.

இரண்டு நூல்களையும் கரைத்துக் குடித்து நல்லறிவு பெற்றான் பாலகன் வினோபா. அம்மா சொன்னது போலவே "படிக்கப் படிக்க இனிக்கிறது. சுவைக்கச் சுவைக்கத் தித்திக்கிறது. பாரதத்தின் பெருமையைப் பாருக்கு எடுத்து ஓதுகிறது" என்பதை உணர்ந்து, தானும் அதன்படி நடக்கலானான்.

சிறு பாலகனுக்கு ஒரே உற்சாகம். அம்மா சொன்னது போலப் புஸ்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு முனைந்து படித்தான். இது வரையில் எழுத்துக் கூட்டிக் கட்டுத் தடுமாறிப் படித்துக் கொண்டிருந்தவனுக்குக் கிடுகிடு வென்று தவறில்லாமல் படிக்க வந்து விட்டது.

பின்னைப் பிராயத்தில் போட்ட அசைக்க முடியாத அஸ்திவாரத்தின் காரணமாகவே, அன்பும் அறிவாற்றலும் பெற்று அடிகளாக உருமாறிப் பாத யாத்திரை செய்து பாரதத்தின் பெருமைக்குப் பெருமை சேர்க்கிறார் ஸ்ரீ வினோபாபாவே அவர்கள். — ரா. வீ.




## சிந்தை கவரும் சிகிரியா

பொன்னாசையாலும் பொருளாசையாலும், பெற்ற தந்தையைச் சிறைப் பிடித்து நான்கு சுவர்கள் நடுவே வைத்துக் கொலை செய்த காசியப்பன் என்ற சிங்கள மன்னன் தன் பாதுகாப்புக்காகத் தேடிக்கொண்ட கோட்டைதான் இந்தச் சிகிரியா.

அழியாத அற்புதமான எழில் வண்ணங்களால் மலையை அழகுபடுத்திய காசியப்பன் இரத்தத்திலே கொலை வெறியோடு, கலை வெறியும் கலந்திருந்தது என்பதைச் சொல்லாமல் சொல்லிக் கொண்டு எழில்வளம் மிகுந்த இன்பச் சூழ்நிலையிலே நீலவானத்துக்கு இணையாக நிமிர்ந்து நிற்கிறது இந்தப் பச்சை மலை.

கே. வி. எஸ். மோகன்

# நினைவிருக்கிறதா?


சண்பகராமன் பிள்ளை

சென்னை நகரம் சென்ற இரண்டு உலக மகாயுத்தங்களின்போதும் குண்டு வீச்சுக்கு இலக்காகியுள்ளது என்பது நம்மில் பலருக்கு மறந்திருக்கும்.

1914ல் (செப்டம்பர் 22) ஜெர்மன் கப்பல் எம்டன் பிரயோகித்த குண்டு துறைமுகப் பகுதியைத் தாக்கியது. 1943 (அக்டோபர் 12) ஜப்பானிய விமானம் ஒன்று சென்னை மீது குண்டு வீசியது. இவ்விரண்டு குண்டுகளின் துண்டுகள் சென்னை கோட்டை மியூஸியத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

ஃ ஃ ஃ

மூவாயிரம் டன் எடையுள்ள ஜெர்மன் கப்பல் சீனாவில் கியோ-சௌ என்ற இடத்திலிருந்து புறப்பட்டுச் சிங்கப்பூர் வந்து செப்டம்பர் 22(1914)ந் தேதி சென்னை மீது குண்டு வீசியது. இதனால் மாபெரும் பெட்ரோல்

## எம்டன் குண்டு


வான்முல்லர்

'டாங்கி' தீப்பிடித்து நாசமாகியது. இந்தக் கப்பல் பின்னர் புதுச்சேரி வழியாக இலங்கையைச் சுற்றிக் கொண்டு லக்ஷத் தீவுகளுக்குச் சென்றது. போர் ஆரம்பமான மூன்று மாதங்களுக்குள் இக்கப்பல் இருபத்தொரு பிரிட்டிஷ் வியாபாரக் கப்பல்களைப் பிடித்து அவைகளில் பதினேழு கப்பல்களை மூழ்கடித்தது. கோகோஸ் தீவு அருகில் அதே வருடம் நவம்பர் 9ந் தேதி 'எம்டன்' மூழ்கடிக்கப்பட்டது.

இக்கப்பலின் 'கேப்டன்' வான்முல்லர் வீணாக உயிர்ச் சேதம் ஏற்படலாகாது என்ற கொள்கையுடையவர். சண்பகராமன் பிள்ளை என்ற தியாகியின் தூண்டுதல் காரணமாகவே எம்டன் கப்பல் இந்தியாவைச் சமீபித்தது என்பது பின்னர்தான் தெரிய வந்தது. இவர் அக்கப்பலில் வந்து, இந்தியரை அடக்கி ஆண்டு வந்த பிரிட்டிஷாரை வெளியேற்ற ராணுவ முகாம்களில் குண்டு வீசச் செய்ததுடன் செம்படவன் போல் நடித்து இந்தியாவில் புரட்சித் தீயை மூட்டியவர்.

ஃ ஃ ஃ

**1943** அக்டோபர் 12ந் தேதி விடியற்காலை நான்கு மணிக்குச் சென்னை நகரில் அபாயச் சங்கு அலறியது. யுத்த பீதி காரணமாக நகரமே அநேகமாகக் காலி செய்யப்பட்டு வெறிச்சோடிக் கிடந்த சமயம். ஹைகோர்ட்டுக்குப் பின்புறம் பழைய கலங்கரை விளக்கத் தூண் அருகில் வெளியில் இக்குண்டு விழுந்ததால் சேதம் எதுவும் ஏற்படவில்லை. இதைத் தொடர்ந்து மீண்டும் குண்டு வீசப்படும் என்று எதிர்பார்க்கப்பட்டது. எப்போது அபாயச் சங்கு அலறுமோ என்ற பீதியுடனேயே மக்கள் இருந்தனர். ஆனால் ராஜாஜி அவர்கள் பெரிய கூட்டங்களில், ''நான் சொல்லுகிறேன். ஜப்பான்காரன் நிச்சயமாக இந்தப் பக்கம்கூடத் தலையைக் காட்டமாட்டான்'' என்று சொல்லி வந்தார்கள். அவர் வாக்குப் பலித்தது.

— நந்தலால்



விஞ்ஞானிகள் வரிசை

# டாக்டர் சாமிநாதன்

**வி**ஞ்ஞானிகள் இரண்டு வகை. ஒரு வகை: தங்களைச் சுற்றியுள்ள உலகை மறந்து விஞ்ஞான உலகிலேயே ஆழ்ந்திருப்பவர்கள்.

மற்றொரு வகை: விஞ்ஞான அறிவியல் உலகில் மேலே மேலே சிறப்புக்கள் பெற்றாலும், தாங்கள் மண்ணுலகில்தான் இருக்கிறோம் என்பதை மறக்காமல் வாழ்பவர்கள்.

இந்த இரண்டாம் வகையைச் சேர்ந்தவர், தில்லியில் இந்திய விவசாய ஆராய்ச்சிக் கழகத்தின் தாவர இயல் பகுதியில் பணியாற்றும் டாக்டர் எம். எஸ். சாமிநாதன்.

நமது விவசாயத் துறையில் பெரும் புரட்சி ஏற்பட்டு, உணவு தானிய விளைச்சலில் பற்றாக்குறையாக இருந்த நம் தேசம் தன்னிறைவைப் பெற்றுவிடக்கூடும் என்ற நம்பிக்கையொளி காணத் தொடங்கியிருப்பதற்கு அவரது ஆராய்ச்சியின் பயனும் ஒரு காரணம். இப்படியெல்லாம் புகழ்வதைச் சற்றும் விரும்பாதவர் டாக்டர் சாமிநாதன். 'எனது சாதனை என்ன, ஒன்றுமில்லை — எல்லாம் என் கழக மாணவர்களும் சக ஆசிரியர்களும் சாதித்தவை' என்றுகூறுவார்.

டாக்டர் சாமிநாதன் மாணவராக இருந்த காலத்திலேயே ஒரு குறிக்கோளோடு தான் விவசாய விஞ்ஞானத்தைப் பாடமாக எடுத்துக் கொண்டார். நாட்டில் உணவு உற்பத்தியைப் பெருக்கத் தக்க ஆராய்ச்சி நடத்த வேண்டும் என்று ஆசையோடு எடுத்துக்கொண்டார். அதற்கு ஏற்பக் கல்லூரிப் படிப்பு முடிந்ததும், தாவர பாரம்பரிய சாஸ்திர ஆராய்ச்சியையும் உயிர் அணுக்கள் ஆராய்ச்சியையும் மேற்கொண்டார். விவசாயத்தில் எரு இடுதல், தண்ணீர் பாய்ச்சுதல், உழுதல், களை எடுத்தல் ஆகியவை தவிர நல்ல விதைகளாக இருந்தால்தான் மேற்கண்ட அத்தனை உழைப்புக்கும் பயனுண்டு என்பதை உணர்ந்தார். ஆகவே, பயிர்களின் பாரம்பரிய ஆராய்ச்சி செய்து, நல்ல தரமான பரம்பரையை உற்பத்தி செய்ய முனைந்தார்.


டாக்டர் சாமிநாதன்

உருளைக்கிழங்குப் பயிருக்கு டாக்டர் சாமிநாதன் புரிந்த தொண்டு மிகச் சிறப்பானது. இரண்டு மெக்ஸிகோ உருளைக்கிழங்கு பயிரில் செயற்கை முறையில் மகரந்தத் தாள்களைச் சேர்த்தால் ஒரு புதிய வகை உருளைக் கிழங்கு கிடைக்கும் என்று ஆராய்ச்சி செய்து சொன்னார். இவ்வகை உருளையைப் பெறப் பல ஆண்டுகளாக மேனாட்டு அறிஞர்கள் முயன்று தோற்றிருக்கின்றனர். இத்துறையில் ஒரு புது முறையை டாக்டர் சாமிநாதன் அறிவித்தார். அதை மேனாட்டு அறிஞர்களும் பின்பற்றிப் பார்த்தனர். டாக்டர் சாமிநாதன் குறித்த முறை வெற்றி பெற்றது. அதிலிருந்து அம்முறைக்கு ''ஸ்வாமிநாதன் ஆர்டிபிஷியல் ஸ்டிக்மா மெதட் **(Swaminathan Artificial Stigma Method)** என்றபெயர் நிலைத்துவிட்டது.

பாகிஸ்தானுக்குச் சென்ற வங்கப் பகுதியில் சணல் சாகுபடியாகும் நிலம் அதிகம். மேற்கு வங்கத்தில் சொற்பம். டாக்டர் சாமிநாதன் இருவகை சணற்பயிரைச் சேர்த்துப் புது வகை சணற் பயிரைச் சிருஷ்டித்தார். அதன் பயனாகக் குறைந்த நிலப் பரப்பிலேயே அமோகமாகச் சணல் விளைந்தது! மேற்கு வங்க சணல் ஆலைகள் பெரு நஷ்டத்திலிருந்து தப்பின.

அவரது ஆராய்ச்சியின் சிகரம் என்று சொல்ல வேண்டியது குட்டை கோதுமை ரகம். இப்பயிர் அவர் நினைக்கிறபடி உருவானால் நாட்டில் கோதுமைப் பற்றாக்குறையே இல்லாமல் செய்து விடலாம்!

வட இந்தியாவில் 'பாகமதி' என்ற உயர் ரக நெல்சாகுபடியாகிறது. ஆனால் அதன் மகசூல் குறைவு. இதன் விளைவைப் பெருக்குவது எப்படி என்று ஆராய்ந்தார் டாக்டர் சாமிநாதன். டெய்ச்சுங் நேட்டிவ்–1 என்ற குட்டை ரக நெல் பயிருடன் பாகமதியையும் சேர்த்து, டெய்ச்சுங்-1ன் குட்டைத்தனம் — உயர் மகசூல், பாகமதியின் உயர்ந்த தரம் ஆகியவை இணைந்த ஒரு புதுப் பயிரை இந்திய விவசாயக் கழகம் கண்டு பிடித்தது.

டாக்டர் சாமிநாதன் விஞ்ஞானத்துக்குப் பாரதம் அளிக்கக்கூடிய மிக உயரிய பரிசான சாந்தி ஸ்வரூப் பட்நாகர் பரிசை 1961ல் பெற்றார். செக்கோஸ்லோவேகிய நாட்டின் விஞ்ஞானக் கழகம் மெண்டல் ஞாபகார்த்தப் பரிசை வழங்கியது. மெண்டல்தான் உயிர் அணுக்களின் பாரம்பரிய ஆராய்ச்சிக்குத் தந்தை போன்றவர். அவர் பெயரில் வழங்கப்படும் பரிசு, உலக விஞ்ஞானிகளால் மிக உயரியதாகக் கருதப்படுகிறது. இதை சாமிநாதனுக்கு முன், ஆசியாவில் யாருமே பெற்றதில்லை! இது தவிர அகில உலக விஞ்ஞானக் கழகங்களில் மிக உயரிய பதவிகள் வகித்துப் புகழ் பெற்றிருக்கிறார்.

இப்படி அகில உலகப் புகழ்பெற்ற டாக்டர் சாமிநாதன் 1925ல் கும்பகோணத்தில் பிறந்தவர்.

கணிதத் துறைக்கு ராமானுஜத்தை வழங்கிப் பெருமை தேடிக் கொண்ட கும்பகோணம், தாவர இயலின் உயிரணுக்கள் ஆராய்ச்சித் துறையில் பல அரிய சாதனைகள் புரிந்து உலகப் புகழ்பெற்ற சாமிநாதனையும் பாருக்கு ஈந்திருக்கிறது. ஆதாரம்: ''**ஹிந்து**''

# துருவங்கள் சேர்ந்தால்....?

பரதநாட்டியத்துக்கும் கிரிக்கெட் மாட்சுக்கும் ஒரு சம்பந்தமுமில்லை தான். எனினும், ஸ்ரீமதி ருக்மிணிதேவியைக் கிரிக்கெட் ஆட்டத்தின் நேர்முக வர்ணனையைச் செய்யச் சொன்னால்......?

ஆகாசவாணி, சென்னை வானொலி நிலையம். இப்போது சேப்பாக்கம் எம். ஸி. ஸி. மைதானத்தில் மேற்கிந்தியக் கோஷ்டியினருக்கும் பாரத கோஷ்டியினருக்கும் நடந்து கொண்டிருக்கும் நான்காவது கிரிக்கெட் டெஸ்ட் மாட்சின் நேர்முக வர்ணனையைக் கேட்க நேயர்களைச் சேப்பாக்கத்துக்கு அழைத்துச் செல்கிறோம்.



எல்லோருக்கும் வணக்கம்.

சேப்பாக்கம் கிரிக்கெட் மைதானத்திலிருந்து ருக்மிணி அருண்டேல் பேசுகிறேன். பந்தய மைதானம் பச்சைப் பசேரென்று கண்களுக்கு ரொம்ப ரம்மியமாக இருக்கிறது. காற்று இதமாக அடித்துக் கொண்டிருக்கிறது. நான்கைந்து கோஷ்டி நடனங்களை இந்த மைதானத்தில் ஏககாலத்திலே நடத்திப் பார்க்கலாம் போல் தோன்றுகிறது.

அம்பயர்கள் அற்புத ராவும் ஆனந்த கோஷும் புறப்பட்டு விட்டார்கள். கண்வ முனிவரின் சீடர்கள் சகுந்தலைக்குத் துணை செல்வது போல நிதானமாக விக்கெட்டுகளை நோக்கி நடக்கிறார்கள்.

மேற்கிந்திய கோஷ்டியின் காப்டன் சோபர்ஸ் படை சூழக் கிளம்பிவிட்டார். அயோத்தி நகரை விட்டுப் பிதுர்வாக்கிய பரிபாலனம் செய்யக் கிளம்பிய ராமபிரானை வழியனுப்ப வந்த நகர மக்கள் போல் சோபர்ஸ் பின் அவருடைய சகாக்கள் செல்கிறார்கள். ஒருவருக்கொருவர் பந்தைப் போட்டுப் போட்டுப் பிடித்துக் கொள்வது ஒய்யாரமாக இருக்கிறது.

இந்திய கோஷ்டியின் காப்டன் பட்டாடியும், சந்து போர்டேயும் கையில் மட்டை தாங்கிப் புறப்பட்டு விட்டார்கள். பார்வையாளர்கள் உற்சாகமாகக் கரகோஷம் செய்கிறார்கள்.

அதோ!... ஹால், பௌலிங் செய்ய ஓடி வருகிறார். ஆஹா! என்ன துரித கதி! துரித கதியிலும் காலப் பிரமாணம் இம்மியும் பிசகவில்லை! பந்து 'டெலிவரி'யின்போது என்ன அற்புதமான தீர்மானம்! 'இருதத் தரி டெத்தோம்' என்ன சுத்தமாகப் பேசுகிறது!

பந்தைத்தான் வீசுகிறார்! ராமபாணமாக அது பாய்ந்து ஆஃப் ஸ்டம்ப் முன் குதித்துக் கிளம்புகிறது. பட்டாடி ஒரு காலை முன்னால் வைத்து மட்டையைச் சுழற்றுகிறார். வள்ளி திருமணத்தில் 'ஆலோலம்' பாட்டுக்குக் கவண் வீசும் அபிநயம் அந்தச் சுழற்சியில் இருக்கிறது. பந்தைத் தடுப்பது விக்கெட் கீப்பரின் கைதான்! பட்டாடியின் மட்டை அல்ல....

இப்போது போர்டே சோபர்ஸ் பந்தைச் சந்திக்கத் தயாராகிறார். மட்டையை விக்கட் முன் போர்டே தட்டுவது நாட்டியப் பாடத்தை ஆரம்பிக்கும் குழந்தைக்காக



"குளிர்வா ழைப்பூக் கொப்பூழ் போன்ற
ஒளிஇமை விலக்கு வெளிப்படும் கண்ணுள்
முதுவை யத்தின் புதுமை கண்டதோ ?
தங்க மாதுளைச் செங்கனி பிளந்த
மாணிக்கம் அந்த மதலையின் சிரிப்பு
செம்ப வழத்துச் சிமிழ்காய்ந்த அமுதாய்ச்
சிரித்தது. பின்னை சிரிக்கையில்
சிரித்தது வையம் சிரித்தது வானமே!

(கவிஞர் பாரதிதாசனின் 'குழந்தை'
என்ற கவிதையிலிருந்து ஒரு பகுதி)

- பொருளடக்கப் பகுதியில் படம் :
ஸ்ரீமதி சரோஜா ராமச்சந்திரன்.

நட்டுவனர் 'தையா தை' என்று தட்டுவது போல இருக்கிறது.

சோபர்ஸ் இடது கையால் பந்தை மெதுவாகச் சுழற்றி வீசுகிருர். பாவம் நிறைந்த வீச்சு! பந்து தரையில் பதியும் இடத்தைப் பார்க்கத் தவறிவிட்ட போர்டே பதற்றத்துடன் கால்களைத் தட்டு மெட்டு அடவு போட்டு மட்டையை ஒரு பக்கம் ஒதுக்குகிருர். அவ லயத்தை அவர் முகத்தில் காண முடிகிறது.

விக்கட்கீப்பர் கைக்குப் பந்து போனதும் அவர் 'ஹவ் இஸ் இட்?' என்று அதட்டுகிருர். அவர் கேள்வி கருதியிலிருந்து விலகிய அபசுரமாக ஒலிக்கிறது. அம்பயர் அற்புதராய் தலையை வேறு பக்கமாகத் திருப்பிக் கொள்கிருர் விசுவாமித்திரர் ஜாடையாக!

...பந்தைத் தடுப்பதற்காக மேற்கிந்தியக் கோஷ்டியைச் சேர்ந்த இவர் விக்கட்டுக்குப் பின்னல் வரிசையாகக் கரம் குவித்து நிற்பது கதக்களி பாணியில் நிருத்த நடனத்தில் பங்கு கொள்வோர் மேடையில் பக்கவாட்டில் அசைந்து அசைந்து சுற்றி வருவதை நினைவூட்டுகிறது.

....பட்டாடி மட்டை பந்தில் பட்டு விட்டது. பந்து 'மிட் ஆன்' பகுதியில் கருடன் போல் பறந்து வந்து இறங்குகிறது. அலாரிப்பின்போது கௌரி பூஜை செய்யும் குழந்தை போலக் கரத்தை ஏந்திக் காத்திருக்கும் டைஹே கையில் அந்தப் பந்து சிபிச் சக்கரவர்த்தியிடம் சரணடைந்த புரு போல் வந்து சேருகிறது. அம்பயர் ஆனந்த கோஷ் கையை மேலே தூக்கிவிடுகிருர். ஜீவாத்மா பரமாத்மாவிடம் ஐக்கியமாகி விட்ட நிலை.

...ஆட்டத்தில் தில்லானு கட்டம் வந்து விட்டது....அரங்கேற்றத்தின் ஆரம்ப கட்டத்திலேயே களைப்படைந்து உட்காரும் குழந்தை போல் சந்திரசேகர் நான்காவது பந்திலேயே விக்கெட்டைக் கோட்டை விட்டுவிட்டுப் பெவிலியனை நோக்கி வேகமாக நடக்கிருர்.

கிரிபித் வீசிய பந்தை அடிக்க அவர் அடிக்கடி மட்டையை வீசிய அபிநயமே சரியானதாக இல்லை. அடிக்கத் தவறினலும் அபிநயம் தவறலாமா?

நடனமாடினர் நிகழ்ச்சியின்போது நடராஜரின் நடனக் கோலங்கள் பலவற்றை ஃபோட்டோ பிடித்துக் கொள்ள வசதியாகப் பலர் 'போஸ்' கொடுத்துக் கொண்டு நிற்பார்களே, அப்படி சந்திரசேகரும் 'பிளாக்' செய்த 'போஸ்' மாருமல் நின்றிருக்க வேண்டும். ஆனல் இனி அதை நினைத்துப் பயன் என்ன?...

....தண்ணீர் குடிக்கும் நேரம் வந்துவிட்டது.... நீர்க் குவளைகள் நிறைந்த டிராலி வண்டி மைதானத்துக்கு வருகிறது....

சில நிமிடங்கள் களைப்புத் தீர ஆட்டக்காரர்கள் புல் தரையில் சரிந்து சாய்ந்து உட்காருகிருர்கள். சாகுந்தலத்தில் சகுந்தலை லிகிதம் எழுதுவதை நினைவூட்டுவது போல் ஹண்ட் படுத்துவிட்டார்....

கிரிக்கெட் மாட்சைப் பற்றிய நேர்முக வர்ணனையை மீண்டும் பிற்பகல் இரண்டு மணிக்குக் கேட்கலாம். இப்போது நிலையம் திரும்புகிறோம். — **கோமதி சுவாமிநாதன்**

**அடுத்த இதழில் -**

**தியாகராச சரிதம் :**
**திரு அண்ணாதுரை நிகழ்த்துகிருர்!**

## சுவரொட்டிகள் கிழிப்புச் சங்கம்!



பம்பாயிலுள்ள சிலர் ஒன்றுசேர்ந்து சமீபத்தில் 'சுவரொட்டிகள் கிழிப்புச் சங்கம்' என்று ஒரு சங்கம் ஏற்படுத்தியிருக்கிருர்கள்.

சமீபத்தில் பம்பாயில் நகரசபைத் தேர்தல் நடந்ததல்லவா? அதன் விளைவாக ஓர் இடம் கூட விடாமல் எல்லா இடங்களிலும் தேர்தல் சுவரொட்டிகள் ஒட்டப்பட்டன. வீட்டையும், கண்ணையும் கெடுக்கும் இவைகளை அகற்றவே இந்தச் சங்கம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறதாம்.

ஆதாரம் : 'கரெண்ட்' - தகவல்: வி.ந. ஸ்ரீதரன்










இது நாள் வரை நீங்கள்
கனவிலே கண்டு
நெஞ்சத்தைப்
பறிகொடுத்து வந்த
நறுமணப் பவுடரை
நனவாக்குகிறது,
புதுமுறையில் அமைந்த
கோயா, பனித்துளிக்கு
நிகரான இந்த பவுடர்
இந்த நாள் வரை
கண்டிராதபடி மைய
அரைக்கப்பட்டதும்
மிருதுவானதும் ஆகும்.

அது மட்டுமா? கோயா
நிபுணர்கள் இதில் புகுத்தி
யுள்ள பரிமளம் நாள் முழு
தும் நிலைத்து, புத்தம்புதிய
சுகந்தத்தைப் பரப்பிக்
கொண்டே இருக்கும்.

புதுமை மணம்
பொருந்திய 'பிளாக்
ரோஸ்' பூத்த புது
மலரின் வாசனை
வீசும் 'கார்டீனியா',
உள்ளத்தை அள்ளும்
'பாஸ்போர்ட்'—
நீங்கள் தேர்ந்தெடுக்க
இத்தனை நல்ல வாசனை
ரகங்களில் கோயா
கிடைக்கிறது. நெடு
நாள் நீடிக்கும் உயர
மான புதிய டின்னில்
மூன்றுமே வருகின்றன
என்பதை மறவாதீர்.



புதிய முறையில்
அமைத்த உயரமான
புதிய டின்னில் கிடைக்கும்
அருமையான பவுடர்

இந்த நறுமண
பவுடரைத்
தயாரிப்போர்

# கோயா

பாரிஸ்
லண்டன்
நியூயார்க்



அட்லாண்டிஸ் (ஈஸ்ட்)
லிமிடெட்
(இங்கிலாந்தில்
இணைக்கப்பட்டது)

AGC-5 TH



# மகாபாரதம்

## ராஜாஜி





## 22. முதல் தாம்பூலம்

சபையில் நடக்கும் நடவடிக்கை தங்களுக்குப் பிடிக்கவில்லை என்பதைக் காட்டுவதற்காகச் சிலர் சேர்ந்தாற்போல் எழுந்து வெளியே போகும் வழக்கம் ஜனநாயகத்தில் முளைத்த நவீனக் குறும்பு அல்ல. பழைய நாட்களிலும் இந்த 'வாக் — அவுட்' முறை கையாளப்பட்டது என்பது மகா பாரதம் படித்தால் தெரிய வரும்.

பாண்டவர்கள் இந்திரப் பிரஸ்தத்தில் ராஜதானி ஏற்படுத்திப் பெரிய ராஜசூய யாகம் செய்தார்கள். பாரத தேசத்தில் அக்காலத்தில் அரசர்கள் பலர் சுதந்திர ஆட்சி புரிந்து வந்தனர். ஒரு தருமம் ஒரு பண்பாட்டையே எல்லாரும் பின்பற்றி வந்தபோதிலும் ஒரு அரசனுடைய தேசத்திலும், ஆட்சியிலும் மற்றொருவன் பிரவேசிக்க மாட்டான். ஆனால் அவ்வப்போது யாராவது ஒரு பராக்கிரமசாலியான அரசன் நாடு முழுவதும் தூது அனுப்பி ராஜாதி ராஜனாக இருக்க மற்ற அரசர்களிடம் அனுமதி பெறுவான்! அநேகமாக யுத்தமும் கலவரமுமில்லாமலே முடியும். அனுமதி பெற்ற பிறகு ஒரு பெரிய ராஜசூய யாகம் செய்வான். எல்லா ராஜாக்களும் யாகத்துக்கு வந்து மகாராஜனுடைய பேராட்சியை ஒப்புக் கொண்டு ஊர் திரும்புவார்கள். இந்த வழக்கப்படி ஜராசந்தன் கொல்லப்பட்ட பிறகு பாண்டவர்கள் ராஜாக்கள் எல்லோரையும் கூப்பிட்டு ராஜசூய யாகம் நடத்தினார்கள்.

அழைப்புக்கு இணங்கிச் சபைக்கு வந்தவர்களுக்கு மரியாதை செய்யும் சமயம் வந்தது. யாருக்கு முதல் மரியாதை என்கிற கேள்வி பிறந்தது. தருமபுத்திரன் விருத்தரான பீஷ்மாச்சாரியரைக் கேட்டான். கிழவனார், துவாரகாபுரி அரசனான கண்ணனுக்கு அக்கிர பூஜை செய்ய வேண்டும் என்று அபிப்பிராயம் கொடுத்தார்.

இதை ஒப்புக்கொண்டு யுதிஷ்டிரன் ஏவியபடி தம்பி சகாதேவன் பாசு, அர்க்கியம், மது வர்க்கம் இவைகளை முறைப்படி, ஸ்ரீ கிருஷ்ணனுக்குச் சமர்ப்பித்தான்.

இவ்வாறு வாசுதேவனைக் கௌரவித்தது, சேதி தேசத்து ராஜாவான சிசுபாலனுக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. அவன் ஒரு பெரும் சிரிப்புச் சிரித்துவிட்டு, ''இது வியப்புக்குரிய அநியாயமாக இருக்கிறது. ஆனால் இதில் வியப்பென்ன? ஆலோசனை கேட்டவன் முறை கெட்ட முறையில் பிறந்தவனல்லவா! (குந்தி தேவியின் புத்திரர்கள் பாண்டு ராஜாவின் மக்களல்ல வென்பதைச் சொல்லி இகழ்கிறான்) ஆலோசனை சொன்னவனோ எப்போதும் தாழ்ந்த இடத்தையே தேடி ஓடும் தாயின் வயிற்றில் தோன்றியவன். (பீஷ்மனுடைய தாய் கங்கா தேவி; நதி மேட்டிலிருந்து தாழ்ந்த இடத்தைத் தேடி ஓடும் அல்லவா? இதை வைத்து ஏளனம் செய்கிறான்.) அக்கிர பூஜை செய்த சகாதேவனும் ஒழுங்கு பிறழ்ந்த பிறப்புடையவன்தானே? மரியாதையை அங்கீகரிக்கிறவனோ மாடு மேய்க்கிறவர்கள் குலத்தில் வளர்ந்த மூடன். இந்த முறை தவறிய நடவடிக்கையைப் பார்த்துக் கொண்டிருக்கும் சபையோர் ஊமைகள். யோக்கியர்களுக்கு இங்கே இடமில்லை'' என்றான். சபையில் சிலர் கோபத்துடன் சிசுபாலனுடன் சேர்ந்து சிரித்தார்கள். அதனால் உற்சாகமடைந்து அவன் மறுபடி யுதிஷ்டிரனைப் பார்த்துச் சொன்னான்:

''சபையில் எத்தனையோ அரசர்கள் இருக்க நீ கிருஷ்ணனுக்கு முதல் மரியாதை செய்தாயே! ஒருவனுக்குச் செய்ய வேண்டிய மரியாதையைச் செய்யாமல் இருப்பதும், செய்ய வேண்டியதற்கு மேல் அதிகமாக ஒருவனுக்குச் செய்வதும் இரண்டும் பெரும் குற்றமல்லவா? ராஜாதி ராஜனாக விரும்புகிற உனக்கு இது தெரியாமல் போயிற்றே!''

கோபாவேசமாக இன்னும் சொல்லிக்கொண்டே போனான்: ''சபையில் எவ்வளவு மகான்கள் இருக்கிறார்கள்? எத்தனை ராஜாக்கள் வீற்றிருக்கிறார்கள்? இவர்கள் எல்லோரையும் விட்டுவிட்டு அரசர்களுக்குரிய மரியாதையை அரசனல்லாத இந்த மாடு மேய்ப்பவனுக்குக் கொடுத்தாயே; கண்ணன் தகப்பனார் வாசுதேவன். அவன் ராஜா உக்கிரசேனனுடைய காரியஸ்தன். ஆகையால் கண்ணன் ராஜ குலத்தில் பிறந்த அரச குமாரன் அல்ல என்பது என்னுடைய ஆட்சேபணை. உனக்குத் தேவகியின் புத்திரனிடம் பட்சபாதம் இருந்தால் அதைக் காட்டுவதற்கு இதுதானா சமயம்? பாண்டு வம்சத்தாருக்கு இது தகாது; பாண்டு புத்திரர்களே! நீங்கள் சிறுவர்கள். ராஜ சபை நடத்தும் முறை உங்களுக்குத் தெரியவில்லை. இந்தக் கிழவனான பீஷ்மன் தவறான யோசனை சொல்லி உங்களைப் பெரும் குற்றத்தில் தள்ளினான். கிருஷ்ணன் ஒரு தேசத்து அரசனல்ல. 'ஹே, யுதிஷ்டிரனே! ராஜாக்களுடைய சபையில் அவனுக்கு எவ்வாறு நீ அக்கிர பூஜை தரலாம்? வயதிலாவது முதிர்ந்தவனா? அதுவுமில்லை. அவனுடைய தகப்பனார் வாசுதேவன் இருக்க மகனுக்கு இந்த மரியாதை பெற அதிகாரம் ஏது? அல்லது இவன் உனக்கு ஆசிரியனா? ஆசிரியரான துரோணர் இங்கே சபையில் இருக்கிறாரே! ஒருவேளை இந்தக் கிருஷ்ணன் யாகம் செய்வதில் நிபுணன் என்று ராஜசூய யாகத்தில் இவனுக்கு அக்கிர பூஜை தந்தாயோ? துவைபாயன வியாசர் சபையில் இருக்கிறாரே, அவரல்லவோ யாகங்கள் நடத்தும் பெரியோர்களில் முதல்வர்! இந்த முதல் மரியாதை உன் குலத்தில் விருத்தியாப்பியமடைந்த பீஷ்மனுக்கே செய்திருந்தாலும் ஒருவாறு சமாதானமாகலாம்.

''உங்கள் குலகுரு கிருபாசாரியார் சபையில் இருக்க இந்த மாட்டுக்காரனுக்கா அக்கிர பூஜை செய்வது? வீரனும் சர்வ சாஸ்திர விசாரதருமான அசுவத்தாமா சபையில் இருக்க அவரை மறந்து நீ எப்படி அக்கிர பூஜைக்குக் கிருஷ்ணனைத் தேர்ந்தெடுத்தாய்?

''அரசர்க்கரசனான துரியோதனன் இருக்கிறானே! பரசுராமனின் சீடன் கர்ணன் இருக்கிறானே! அவனல்லவா ஜராசந்தனைத் தனியாக எதிர்த்து வெற்றியும் புகழும் பெற்ற வீரன்! அவனை விட்டு விட்டுச் சபையில் முதல் மரியாதைக்கு இந்தக் கிருஷ்ணனைத் தேர்ந்தெடுத்தாயே! வயதிலும் விருத்தன் அல்ல; ஒரு தேசத்து அரசனுமல்ல; யாகப் பயிற்சி பெற்றவனு



மல்ல; வெறும் பட்சபாதத்தினால் இவனுக்கு அக்கிர பூஜை தந்தாய். அரசர்களையும் பெரியோர்களையும் இப்படி அவமதிக்கவே நீ எல்லோரையும் அழைத்துச் சபை கூட்டினாயா?

''அரசர்களே! குந்தி புத்திரன் யுதிஷ்டிரனை நாம் ராஜாதி ராஜனாக ஒப்புக் கொண்டது அவன் பராக்கிரமத்தைக் கண்டு பயந்து போயல்ல. அவனுடைய தயவைச் சம்பாதித்து லாபமடையவுமல்ல. அவன் விரோதத்தைக் கண்டு பயந்துமல்ல. தருமமே பிரதானமாகக் கொண்டு ராஜ்ய பாலனம் செய்கிறேன் என்று அவன் சொன்னதைக் கேட்டு நாம் அவனைக் கௌரவித்தோம். இப்போது நம்மையெல்லாம் அவமதித்து விட்டான். தர்மாத்மா என்ற புகழ், பெயர் இனி இவனுக்குத் தகாது. ஜராசந்தனை அநியாய முறையில் கொன்ற துராத்மாவுக்கு அக்கிர பூஜை செய்த பிறகு தர்மாத்மா என்கிற பெயர் யுதிஷ்டிரனுக்கு எப்படித் தரும்? கபவன் என்றுதான் இனி அவனைச் சொல்ல வேண்டும்.

''ஏ, கிருஷ்ணனே! இந்தப் பாண்டவர்கள்தான் சுயநலத்தைக் கருதி முறையைப் புறக்கணித்து உனக்கு மரியாதை செய்கிறார்கள்.

''ஆனால், நீ எப்படி ஒப்புக் கொள்ளலாம்? உனக்குத் தெரியாமல் போயிற்றா? தரையில் சிந்திய அவியுணவை யாரும் கவனிக்காமலிருந்தால் ஒரு நாய் தின்றுவிடுவது போல் உனக்குப் பொருத்தமாகாத மரியாதையை நீ ஒப்புக் கொண்டாய். உன்னைப் பரிகசிக்கத்தான் இந்த விளையாட்டை நடத்தியிருக்கிறார்கள் என்று நான் உனக்குச் சொல்லுகிறேன். உண்மையில் இந்த நாடகம் உன்னைக் கௌரவிக்க வேண்டுமென்று நடத்தப்பட்டதல்ல. இது உனக்குத் தெரியவில்லை. கண்ணில்லாத குருடனுக்குச் சௌந்தர்யமான பொருளைக் காட்டுவது போலும், கிலிபனுக்கு விவாகம் செய்து கொடுப்பது போலும், ராஜ்யமில்லாத உனக்கு அரசர்க்குரிய இந்த மரியாதையைச் செய்து பரிகசிக்கிறார்கள்.

''ராஜாதி ராஜனாக விரும்பும் யுதிஷ்டிரனுடைய உண்மைப் பான்மையை இப்போது கண்டோம். பீஷ்மருடைய உண்மைப் பான்மையும் வெளியாயிற்று. வாசுதேவன் எத்தகையோன் என்பதும் கண்டு கொண்டோம். எல்லாம் ஒரே அழகு!''

இவ்வாறு சிசுபாலன் கடுமையான சொற்பொழிவு நிகழ்த்தி விட்டு ஆசனத்திலிருந்து எழுந்து மற்ற ராஜாக்களைப் பார்த்து, ''வாருங்கள், வெளியே'' என்று சொல்லி அவர்களையும் கூட்டிக் கொண்டு சபையிலிருந்து வெளியே சென்றான்.

யுதிஷ்டிரன் வெளியே போனவர்களைப் பின்தொடர்ந்து ஓடினான். ஓடி அவர்களைச் சமாதானம் செய்து மதுரமாகவும் சாந்தமாகவும் பேசினான். ஆனால் அவனுடைய முயற்சி பயன்பெறவில்லை. சமாதானம் ஆகவில்லை. சிசுபாலனுடைய அகம்பாவம் அதிகரித்துக் கொண்டே போயிற்று. பிறகு கண்ணனுக்கும் சிசுபாலனுக்கும் பெரும் போர் நடந்தது. துஷ்டனான சிசுபாலன் கண்ணனால் வதம் செய்யப்பட்டான்.

ராஜசூயம் நடந்து யுதிஷ்டிரன் ராஜாதி ராஜ பதவியைப் பெற்றான்.

## 23. சகுனியின் யோசனை

இந்திரப் பிரஸ்த நகரத்தில் பாண்டவர்கள் நடத்திய ராஜசூய யாகம் முடிந்தது. வந்திருந்த அரசர்களும் மற்றப் பெரியோர்களும் விடைபெற்றுக் கொண்டு திரும்பினார்கள். வியாசரும் அரசனிடம் சொல்லிப் போக வந்தார். தருமபுத்திரன் எழுந்து முனிவருக்கு ஆசனம் அளித்து பூஜித்துப் பக்கத்தில் உட்கார்ந்தான். ''குந்தி புத்திரனே! பெறுதற்கரிய சாம்ராஜ்யப் பதவியை அடைந்தாய். கௌரவ குலம் உன்னால் பெருமை அடைந்தது. நான் போவதற்கு விடை கொடுப்பாயாக'' என்றார் முனிவர்.

குலத்துக்குப் பிதாமகரும் குருவுமான வியாசரின் காலைத் தொட்டு யுதிஷ்டிரன், ''குருவே! என் சந்தேகத்தைத் தீர்க்கக்கூடியவர் நீங்கள்தான். மிகவும் கொடிய உற்பாதங்களைக் கண்டதாகப் பெரியோர்கள் சொல்லுகிறார்கள். அவற்றின் பயன் சிசுபாலனுடைய மரணத்தினால் தீர்ந்து போயிற்றா? அல்லது இன்னும் கவலைக்கிடமுண்டா?'' என்று கேட்டான்.

தரும புத்திரனுடைய கேள்விக்கு வியாச பகவான் சொன்னார்:

''அப்பனே! பதின்மூன்று வருஷ காலம் கஷ்டங்கள் நேரும். க்ஷத்திரிய குலம் அழியப்போவதைக் காட்ட இந்த உற்பாதங்கள் தோன்றின. சிசுபாலனுடைய வதத்தோடு இது முடியவில்லை. இன்னும் பெரிய சம்பவங்களும் நடக்க வேண்டியிருக்கிறது. அரசர்கள் நூற்றுக்கணக்காக மாள்வார்கள். அந்த

நாசத்துக்கு நீ காரணமாவாய். உன் பங்காளிகளுடன் நீயும் உன் சகோதரர்களும் பகைமை கொண்டு க்ஷத்திரிய வம்சத்துக்கே நாசம் தரும்படியான மகாயுத்தம் உண்டாகும். காலத்தின் பயனாக வரும் விதியை யாரும் விலக்க முடியாது. மனங் கலங்காமல் தைரியமாக இருப்பாயாக. நான் போய் வருகிறேன். புலன்களை அடக்கி நிலை தவறாமல் ஜாக்கிரதையாக இருந்து கொண்டு ராஜ்ய பாலனம் செய்வாயாக'' என்று ஆசீர்வதித்தார்.

வியாசர் சென்ற பிறகு கவலைக் கடலில் மூழ்கிய யுதிஷ்டிரன் தன் சகோதரர்களிடம் விஷயத்தைச் சொல்லி, ''வீரர்களே! வியாசர் சொன்ன சொல்லைக் கேட்டு எனக்கு வாழ்க்கையில் வெறுப்பு உண்டாகி விட்டது. அரசர்களுடைய அழிவுக்கு நான் காரணமாவேன் என்று அறிந்த பின், நான் உயிர் வைத்துக் கொண்டிருப்பதில் என்ன பயன்?'' என்றான்.

''அரசராகிய நீர் இவ்வாறு மனத்தைக் கலவரப்படுத்திக் கொள்ளக் கூடாது. விஷயங்களை ஆராய்ந்து அந்தந்தச் சமயத்தில் எது கடமையோ அதைச் செய்ய வேண்டும்'' என்றான் அர்ச்சுனன்.

யுதிஷ்டிரன், ''சகோதரர்களே! ஈசுவரன் நம்மைக் காப்பானாக. கலகமுண்டாகாமல் இருப்பதற்காக நான் பிரதிக்ஞை செய்கிறேன். இன்று முதல் பதின்மூன்று வருஷ காலம் நான் என் சகோதரர்களையாவது மற்ற குலத்தோரையாவது எந்தச் சமயத்திலும் கடிந்து பேசமாட்டேன். குலத்தோர் விருப்பத்தின்படி எப்போதும் நடந்து கொள்வேன். மன வேறுபாட்டினால் தான் உலகத்தில் கலகம் உண்டாகிறது. சண்டைகளுக்கு மூல காரணமாகிய கோபத்தைத் தடுத்துவிட்டு, துரியோதனாதியர்களுடைய பேச்சைத் தடுக்காமல் அவர்களுடைய விருப்பப்படியே எப்போதும் நடந்து கொள்வேன். வியாசர் எச்சரிக்கை செய்தபடி கோபத்துக்கு இடங் கொடுக்காமலிருப்பேன்'' என்றான். அதைக் கேட்ட சகோதரர்களும், ''கலகத்துக்கு நாம் ஒருபோதும் காரணமாகக் கூடாது. நீர் சொல்வது சரியே'' என்றார்கள்.

துரியோதனாதியர் சூதாட்டத்துக்கு அழைத்த போது மாட்டேன் என்று சொல்லாமல் ஒப்புக் கொள்வதற்கு இந்தப் பிரதிக்ஞையே முக்கிய காரணம். கலகம் வரும் என்று பயந்து அதற்கு இடம் கொடுக்காமலிருப்பதற்காக யுதிஷ்டிரன் எடுத்துக் கொண்ட பிரதிக்ஞையே பிறகு கலகத்துக்குக் காரணமாயிற்று. அழைப்பை மறுக்கப் பயந்து சூதாட்டம் ஆடியதின் பயனாகத் தீராத பெருங் கோபமும் பிறகு மகாயுத்தமும் குல நாசமும் உண்டாயின. தெய்வ சங்கல்பம் அப்படியானால் மனிதனுடைய சாதுரியமும் பிரயத்தனங்களும் எண்ணிய நோக்கத்துக்கு நேர் விரோதமான முடிவுக்குப் போய்ச் சேரும் என்பதற்குத் தருமபுத்திரனுடைய இந்தப் பிரதிக்ஞையே உலகப் பிரசித்தமான திருஷ்டாந்தமாகும்.

ஃ ஃ ஃ

**க**லகம் வருமே என்று தருமபுத்திரன் இந்திரப் பிரஸ்தத்தில் கிடக்க, துரியோதனன் பாண்டவராஜதானியில் ராஜசூய யாகம் நடந்த போது தான் கண்ட ஐசுவரியத்தை நினைத்துப் பொறாமை என்கிற எரியும் நெருப்பில் வீழ்ந்து தவித்துக் கொண்டிருந்தான். என்றும் பார்த்திராத செல்வத்தையும், கண்ணைக் கவர்ந்து மோசம் செய்யும்படியான படிகக் கதவுகளையும், சிற்ப வேலைகளையும் யுதிஷ்டிரனுடைய சபாமண்டபத்தில் துரியோதனன் கண்டான். பல தேசத்து அரசர்கள் பாண்டவர்களுக்குச் சிநேகிதர்களாயிருப்பதையும் கண்டான். திருதராஷ்டிரன் மகனுக்குத் தாங்கமுடியாத துயரம் உண்டாயிற்று. பாண்டவர்களுடைய ஐசுவரிய தசையை எண்ணி எண்ணி வருந்திக் கொண்டிருந்த துரியோதனனுக்குத் தன் பக்கத்தில் சகுனி நின்று பேசுவதுகூடத் தெரியவில்லை.

''ஏன் பெருமூச்சு விடுகிறாய்? என் துக்கம் உன்னை வாட்டுகிறது?'' என்று சகுனி கேட்டான்.

''சகோதரர்களால் சூழப்பட்டு யுதிஷ்டிரன் இந்திரனைப் போல் அரசு புரிகிறான். கூடியிருந்த அரசர்களுக்கு எதிரில் சிசுபாலன் வதஞ் செய்யப்பட்டான். அதற்குப் பழி வாங்க எந்த க்ஷத்திரியனும் முன்வரவில்லை. பாண்டவர்களைக் கண்டு பயந்து நடுங்கி ஒன்றும் செய்யாமல் சும்மா நின்றனர். ரத்தினங்களையும் தனங்களையும் ராஜகுலத்தவர், கேவலம் வியாபாரம் செய்து பிழைக்கும் வைசியர்களைப் போல் அடங்கி ஒடுங்கி யுதிஷ்டிரனுக்குக் காணிக்கை செலுத்தினார்கள். இதையெல்லாம் பார்த்தபின் எவ்வாறு வருத்தப்படாமல் இருக்க முடியும்? நான் உயிருடன் இருந்து என்ன பயன்?'' என்றான் துரியோதனன். (தொடரும்)

# ராக்கெட் பூமிக்கு வருமா?

கடந்த மார்ச் மாதம் 28ம் தேதி (அமாவாசை) சென்னையில் இரவு 7 மணி முதல் 7—20 வரை வானில் சில அதிசய ஒளிகள் தென்பட்டதாகச் செய்திகள் வெளியாயிற்று. பரமக்குடியிலும் மார்ச் 30ம் தேதி இரவு அதே நேரத்துக்கு நீண்ட சதுர வடிவில் ஒளிக் கோடுகள் தென்பட்டதாக ஒரு பத்திரிகைச் செய்தி கூறியது.

இந்த ஒளி தும்பா ராக்கெட் தளத்திலிருந்து கிளம்பிய ராக்கெட்டுகளின் ஒளியே என்று பின்னல் ஊர்ஜிதமான போதிலும் வானில் தோன்றிய இந்த விசித்திர ஒளிகள் அதனையொட்டி வேறு பல சிந்தனைகளைக் கிளறி விட்டன. அதன் விளைவாக வானவியல், உயிரியல் அறிஞர்கள் இருவர் இங்கே கல்வி நேயர்களுக்குப் பேட்டி அளிக்கிறார்கள்:

**சென்னை விவேகானந்தா கல்லூரியின் முன்னாள் முதல்வர் பேராசிரியர் டி. என். சேஷாத்திரி எம். ஏ. எல். டி. கூறுவது:**

இந்த ஒளிகளை நான் குறிப்பிட்ட இரு நாட்களிலும் நேரில் பார்க்கவில்லை. ஆனால் இதற்கு முன்பு இது போன்ற ஒளிகளை வானில் பார்த்திருக்கிறேன். நேரில் பார்த்தால்தான் குறிப்பாக இன்னதென்று கூற இயலும். இருந்தாலும் பார்த்தவர்கள் வெளியிடும் தகவல்களைக் கொண்டு ஓரளவு அனுமானிக்கலாம். அடுத்த அடுத்த நாட்களில் ஒரே நேரத்துக்கு அந்த ஒளிகள் தென்படுவதிலிருந்து தும்பா தளத்திலிருந்து செலுத்தப்படும் ராக்கெட்டுகளாக இருக்கலாம் என்று நம்பலாம். இரு நாட்களில் செலுத்தப்பட்ட இரு வேறு ராக்கெட்டுகள் பூமியைச் சுற்றி வரும்போது ஒரே இடத்தில் காணப்பட்டிருக்கலாம். தரை மட்டத்திலிருந்து சுமார் 100 மைல் உயரத்தில் இந்த ராக்கெட்டுகள் பூமியைச் சுற்றுவதால், இரவு 7 மணிக்கு இங்கே இருட்டாக இருந்தாலும் அந்த உயரத்தில் கதிரவனின் ஒளி இருக்கும். அந்த ஒளியில் ராக்கெட்டுகள் பளிச்செனத் தெரியக் கூடும். ராக்கெட்டுகள் இல்லையென்றால் எரி பந்துகளால் ஏற்பட்ட ஒளியாக இருக்கக் கூடும்.''

''எரி பந்துகள் என்றால் என்ன? அவை எவ்வாறு எங்கே உருவாகின்றன?'' என்று விளக்கிக் கூறும்படி கேட்டதற்கு அவர் கூறும் விளக்கம்:

''வால் நட்சத்திரங்கள் சில சந்தர்ப்பங்களில் சூரியன் அல்லது வேறு ஏதாவதொரு கிரகத்தை அணுகி வருவதுண்டு. குறிப்பிட்ட எல்லைக்கு மேல் அவை நெருங்கும்போது சிதறி விடுகின்றன. அவையே எரி நட்சத்திரங்கள் எனப்படும். பூமியின் புவி ஈர்ப்புச் சக்தி பற்றி உங்களுக்குத் தெரியும். நியூட்டன் சித்தாந்தம் என்று கூறுகிறோமே, அதுதான். பூமி சூரியனைச் சுற்றி வருகிறது அல்லவா? அந்த விண்வெளிப் பாதையில் அங்கங்கே சிதறிக் கிடக்கும் எரி நட்சத்திரக் கற்கள் புவி ஈர்ப்பினால் பூமிக்கு இழுக்கப்படுகின்



றன. பூமியிலிருந்து சுமார் நூறு மைல் தூரத்துக்கு அவை வந்ததும் பூமியைச் சுற்றியுள்ள காற்று மண்டலத்துக்குள் பிரவேசிக்கின்றன. வாயு மண்டலத்துடன் அவை உராயும்போது அளவு கடந்த உஷ்ணம் (சுமார் 4000 டிகிரி ஃபாரன்ஹீட்) ஏற்படுகிறது. விநாடிக்கு 30 அல்லது 40 மைல் வேகத்தில் அவை சஞ்சரிப்பதால் அவ்வளவு உஷ்ணம் ஏற்படுகிறது. அந்த உஷ்ணத்திலேயே அவை உருகி ஆவியாகி விடும். ஆவியாகும்போது ஏற்படும் ஒளியே நம் கண்ணுக்குப் புலனாகும் அதிசய ஒளி. ஜெட் விமானம் பறந்து சென்ற பிறகும் அது சென்ற பாதையில் வெண் பனி போன்ற ஒளி (Trail) காணப்படுகிறதல்லவா? அதே போன்று எரி நட்சத்திரம் மறைந்த பிறகும் அது விட்டுச் சென்ற ஒளி நீண்ட நேரம் கண்ணுக்குப் புலப்படும்.

'நட்சத்திரம் விழுகிறது' என்று மக்கள் குறிப்பிடுகிறார்களே — இந்த நிகழ்ச்சியே அது. உண்மையில் நட்சத்திரம் எதுவும் விழுந்து விடுவதில்லை. சூரியனை விடப் பன் மடங்கு பெரிதாகவும் உஷ்ணம் மிகுதியாகவும் உள்ள நட்சத்திரங்கள் மெய்யாகவே விழுமானால், அவை பூமிக்கு வெகு தொலைவில் வரும்போதே பூமியில் உள்ள உயிரினங்கள், தாவரம், நீர் மண், அனைத்துமே உருகிப் பூமியே இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடும்.''

''இந்த எரி நட்சத்திரக் கற்கள் பூமியில் வந்து விழுவதும் உண்டு அல்லவா?''

''ஆம்; சிறியவை விண் வெளியிலேயே ஆவியாகி மறைந்து விடுகின்றன. அப்படி ஆவியாகும்போதுதான் அந்த ஒளியை நாம் பார்க்கிறோம். இவற்றில் இரும்பு அதிகமாக இருப்பதால் சிவப்பு நிறமான ஒளி தென்படுகிறது. ஒளி சுயமாகவே ஏற்படும். அல்லது சூரிய வெளிச்சத்தினாலும் 'பளிச்' செனத் துலங்கும். முற்றும் ஆவியாகாத பெரிய கற்கள் பூமிக்கு வந்து சேருகின்றன. மியூசியத்தில் நாம் பார்க்கும் எரிநட்சத்திரக் கற்கள் இவ்வாறு வந்து சேர்பவையே.''

''எப்போதும் சிவப்பு ஒளிதான் தென்படுமா? அல்லது வேறு வண்ணங்களும் தோன்றுமா?''

''இரும்புச் சேர்க்கையால் சிவப்பு நிறம் தோன்றுகிறது. அவைகளில் உள்ள உலோகச் சேர்க்கையைப் பொறுத்து வண்ணம் அமைகிறது. அவற்றின் மிகுதியான வேகம் காரணமாயும் வண்ணம் தோன்றுவதுண்டு. கற்கள் ஆவியாவதால் வண்ணம் தோன்றுவதும் உண்டு. சில வெண்மையாகவும் இருத்தல் கூடும்.''

''எனவே, இங்கு விசித்திரமான ஒளிக்குக் காரணம் தும்பா ராக்கெட்டாகவோ அல்லது எரி நட்சத்திரங்களாகவோ இருக்க வேண்டும். பிற கோள்களிலிருந்து வருவதாகக் கூறப்படும் பறக்கும் தட்டுகளுக்கும் இவற்றுக்கும் யாதொரு சம்பந்தமும் இருக்க முடியாது — அப்படித்தானே?''

''பறக்கும் தட்டுகள் அன்று இவை. அவ்விதம் நம்ப இடமே யில்லை!''

''ஏன், பிற கோள்களில் மனிதர்களோ அல்லது வேறு உயிரினங்களோ இருக்க முடியாது என்று கூறுகிறீர்களா?''

''மனிதன் உயிர் வாழப் பிராண வாயு, நீர் இவை இன்றியமையாதவை. பிற கோள்களில் வாயு மண்டலம் இருப்பதாகத் தெரியவில்லை. என்றாலும், உயிரினங்கள் எதுவுமே இருக்க முடியாது என்று அறுதியிட்டுக் கூறுவதற்கில்லை. ஓர் உதாரணம் பாருங்களேன் — பூமிக்கு அடியில் அதிக ஆழத்திலுள்ள எரிமலைகள் வெடிக்கும்போது வெளியே வந்து விழும் எரிமலை மீன்கள் (Volcano Fish) பூமியின் மட்டத்துக்கு வந்து சேர்ந்ததுமே இறந்து விடுகின்றன. எரிமலையின் அளவு கடந்த உஷ்ணத்தில் உயிர் வாழும் இந்த மீன்கள், உஷ்ணம் குறைவான பூமண்டலத்தில் உயிர் வாழ இயலவில்லை! குளிர் மிகுதியான வட துருவத்தில் உயிர் வாழும் சில பிராணிகள் பூமத்திய ரேகையின் அருகிலுள்ள சூடான பிரதேசத்துக்கு வந்தால் வெப்பம் தாளாது மரிக்கின்றன. நீரிலே வாழும் மீனுக்குப் பேசும் ஆற்றல் இருந்து நீங்கள் அதனைப் பேட்டி காண முற்பட்டால் நீரிலே ஜீவராசிகள் உயிர் வாழ முடியுமே தவிர நிலத்திலே எந்தவிதமான ஜீவராசியும் வாழ முடியாது என்று அது நினைப்பதாகத் தெரிய வரலாம்! ஆனால் பல்வேறு சூழ்நிலைகளில் — வெப்பதட்ப நிலைகளில் பல்வேறு வகையான உயிரினங்கள் வாழ்கின்றன என்பது நமக்குத் தெரியும். பிற கோள்களில் உள்ள சூழ்நிலை பற்றிய ஆராய்ச்சிகள் வெற்றிகரமாக நடந்தேறிய பிறகுதான் அங்கு உயிரினங்கள் உள்ளனவா என்பது பற்றித் திட்டவட்டமாகக் கூற இயலும்'' என்கிறார் பேராசிரியர் சேஷாத்ரி.

**ஒரு சூடு போதாதா ?**

ஆறே ஆறு சட்டங்களை ஆங்கிலத்திலிருந்து
கன்னடத்தில் மொழிபெயர்க்க
மைசூர் அரசாங்கத்துக்கு ஆன செலவு
ரூ. 74,700 (எழுபத்து நாலாயிரத்து
எழுநூறு ரூபாய்!)

ஆதாரம் : தினமணி
தகவல் : வீ. சீனிவாசன்



**ஹைதராபாத் உஸ்மானியா பல்கலைக் கழகப் பேராசிரியர் டாக்டர் எம். தர்மராஜன், எம்.ஏ., எம்.எஸ்ஸி., பி.எச்.டி., எஃப். எல். எஸ். கூறுகிறார் :**

"பறக்கும் தட்டுகள் பிற கோள்களிலிருந்து வருகின்றன என்பதில் சற்றும் உண்மையில்லை. அப்படி வந்த பறக்கும் தட்டுக்களை யாரும் பார்த்ததில்லை. ஓரிரு புகைப்படங்கள் அமெரிக்க விஞ்ஞானிகளால் பரிசீலிக்கப்பட்டு அவை வெறும் புரட்டு என்று தீர்மானிக்கப்பட்டது. 'நான் ஏமாற்றுவதற்கெனவே இப்படிச் சில புகைப்படங்களை எடுத்தேன்' என்று ஒருவன் ஒப்புக்கொண்டிருக்கிறான். அந்த மனிதன்மீது குற்றம் சாட்டி நடவடிக்கைகூட எடுத்திருக்கிறார்கள், அமெரிக்காவில். எனவே, பறக்கும் தட்டுக்கள் பற்றிய செய்திகள் எல்லாம் மோசடி என்றுதான் கூறவேண்டும்."

"மற்ற கிரகங்களிலிருந்து பறக்கும் தட்டுகள் பூமிக்கு வருவது உண்மையன்று என்று கூறுகிறீர்களே — அப்படியானால் மற்ற கிரகங்களில் மனிதர்கள் இருப்பார்கள் என்பதும் நம்ப முடியாத விஷயம்தானா?"

"மனிதன் சுவாசிக்கப் பிராணவாயு வேண்டும். காற்றில் நைட்ரஜன் முதலிய வாயுக்களும் இருக்க வேண்டியது அவசியம். இல்லாவிட்டால் பிராணவாயுவின் சக்தியால் எல்லாமே எரிந்துவிடும். ஹைட்ரஜனும் பிராணவாயுவும் சேர்ந்தால்தான் நீர் உண்டாகிறது. மனிதன் உயிர்வாழ நீரும் இன்றியமையாதது. எனவே நீர் இருக்க வேண்டுமானால் ஹைட்ரஜன் வாயுவும் இருக்க வேண்டும். இவை யனைத்தும் தேவையான அளவில் பூமியில் இருப்பதாலேயே தாவரங்களும், கொசு முதல் யானை வரையிலுமான பல்வேறு உயிரினங்களும் பூமியில் உள்ளன. பிற கோள்களில் இதே போன்ற சூழ்நிலை உள்ளதா என்று இதுவரை நிச்சயமாகத் தெரியவில்லை."

"சந்திரனில் உள்ள சூழ்நிலை எத்தகையது என்று ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள்?"

"பூமியின் பக்கமுள்ள சந்திர கிரகத்தின் பகுதியைப் பற்றிச் சில தகவல்கள் கிடைத்துள்ளன. சந்திரன் அவ்வளவு சூடான கிரகம் அல்ல. பராஸிை ஜீவிகள் (Parasites) என்னும் கிருமிகள் அங்கு இருத்தல் கூடும். இக்கிருமிகள் உயிர் வாழக் காற்று, நீர் இவை தேவையில்லை. செவ்வாய் கிரகத்திலும் இவை உயிர் வாழக் கூடும்."

"சிறு கிருமிகள் சந்திரனிலும் செவ்வாயிலும் உயிர் வாழும் என்றால் பெரிய அளவிலான உயிரினங்கள் இருப்பதும் சாத்தியமல்லவா?" என்ற கேள்விக்கு டாக்டர் தர்மராஜன் தரும் விளக்கம்:

"பராஸிை ஜீவிகள் ஒரு செடியிலோ, உயிரினங்களின் உடலிலோ போய்ச் சேரும் வரை உயிரற்று விளங்கும். ஏதாவதொரு உடலில் சேர்ந்ததும் அவை இயங்கும். வளர்ச்சி பெறும். இக்கிருமிகளைப் பிரித்து எடுத்து, அவற்றின் இனப் பெருக்கத்தை ஆராய்வதற்கு இரத்தம், கோழி முட்டை போன்ற திரவங்களில் அவற்றைப் புகுத்தி (Culture) அவற்றின் வளர்ச்சியை ஆராய்வது வழக்கம். அதாவது அவை வளர்ந்து பெருகுவதற்கான சூழ்நிலையை உருவாக்குகிறோம். தூசியில் கோடானுகோடி கிருமிகள் உள்ளன. சந்திரனில் புழுதி படிந்த பிரதேசம் நிறைய உள்ளதாகப் புகைப்படங்கள் அறிவிக்கின்றன. எனவேதான் மனிதனையோ மற்ற உயிரினங்களையோ சந்திரனுக்குச் செயற்கைக் கோள்களில் செலுத்தினால், திரும்பப் பூமிக்கு வந்ததும் உடனடியாக இக்கிருமிகளை அழிக்க வேண்டும் என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். சந்திரனில் உள்ள கிருமிகள் அங்கு சென்று திரும்பும் உயிரினங்களைப் பற்றிக்கொண்டு பூமிக்கு வந்து, இங்கே புதிய நோய்களைத் தோற்றுவித்தால் ஆபத்தல்லவா?

"பூமியில் உயிரினங்களின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் கண்ணுறும்போது ஓர் உண்மை புலனாகியுள்ளது. முதலில் தோன்றிய உயிரினம் நீரில் தோன்றியதே. சில உயிரினங்கள் நீரிலும் நிலத்திலும் உயிர் வாழக் கூடியவை. தவளைகளை உதாரணமாகக் கூறலாம். நம் உடலையே எடுத்துக் கொண்டாலும் 80 அல்லது 90 சத விகிதம் நீர்ச்சத்துதான் உள்ளது. ஹைட்ரஜனும் பிராண வாயுவும் ஒரு குறிப்பிட்ட உஷ்ண நிலையில் சேர்ந்து நீராக மாறுகின்றன. எனவே பிற கோள்களில் நீர் இருக்குமானால் உயிரினங்கள் இருத்தல் கூடும். செவ்வாய் கிரகம் நம் பூமியை விடப் பழைமையானது. எனவே அதில் உயிரினங்கள் இருக்கலாம் எனச் சிலர் கருதுகின்றனர். நம்மைவிட அங்குள்ளவர்கள் பல துறைகளிலும் முன்னேறியவர்களாக இருக்கக் கூடும் என்றும் நம்புகிறார்கள் — செவ்வாய் பூமியைவிடப் பழைமையான கிரகம் என்பதால். அதனால்தான் பறக்கும் தட்டுக்களில் வரும் மனிதர்கள் செவ்வாயிலிருந்து வருபவர்களாகக் கற்பனையும் விஞ்ஞானமும் இணைந்த திரைப் படங்களில் சித்திரிக்கிறார்கள். ஆனால் இப்போதைக்குக் கிருமிகள் போன்ற தாழ்ந்த வகை உயிரினங்கள் மட்டுமே சந்திரன், செவ்வாய் முதலிய கோள்களில் இருக்கலாம் என்று நம்ப இடமிருக்கிறது.

"புழு, பூச்சிகள், விலங்குகள், பறவைகள் போன்ற உயிரினங்கள் அங்கு இருக்கும் என்று நிச்சயமாகக் கூறுவதற்கில்லை. இது பற்றி நிறைய ஆராய்ச்சி தேவை" எனக் கூறுகிறார் லிவர்பூல் பல்கலைக் கழகத்தில் இரண்டு ஆண்டுகள் பயின்று டாக்டர் பட்டம் பெற்றுள்ள தர்மராஜன்.

பேட்டி: பாணன்

## 25 மைல்களுக்கு......

1908-ல் பெரிய எரி நட்சத்திரக்கல் ஒன்று சைபீரியாவில் விழுந்ததனால் ஏற்பட்ட காற்று வேகத்தின் உராய்வு காரணமாகச் சுற்றிலும் சுமார் 25 மைல்களுக்குக் காடுகள் அழிந்து விட்டன.

அரிசோனாவில் சுமார் 3000, 4000 ஆண்டு கட்கு முன் விழுந்த ஒரு பெரிய எரிநட்சத்திரக்கல், 570 அடி ஆழம் 4/5 மைல் விட்டமுடைய ஒரு பெரும் பள்ளத்தை ஏற்படுத்தி விட்டது! இப் பள்ளம் இன்றும் அங்கே இருக்கிறதாம்.

......நாசம்!

"நமது முதல் எதிரி மாவோ சே துங் அல்ல; ஹோ சி மின்னும் அல்ல; நமது முதல் எதிரி லிண்டன் பி. ஜான்ஸன்தான்!"

மிகுந்த உணர்ச்சியோடு டாக்டர் பெஞ்சமின் ஸ்பாக்ஸ் இப்படிப் பேசியதை நான் அமெரிக்காவில் கேட்டேன். அவர் பேசியதை டெலிவிஷனில் ஒலிபரப்பினார்கள்.

எனக்கு ஒருபுறம் திகைப்பும், இன்னொருபுறம் மெய்சிலிர்ப்பும் ஏற்பட்டது. அமெரிக்க அரசாங்கத்தின் வியட்நாம் கொள்கைக்கு அமெரிக்க மக்களிடம் எதிர்ப்பு உருவாகிக் கொண்டிருந்தது என்பதை





# வீடுதோறும் வியட்நாம்



நான் அறிந்திருந்தேன். ஆனால் எதிர்ப்பு இந்த அளவுக்கு வளர்ந்திருக்கும் என்று நான் நினைக்கவேயில்லை. இதனால் ஏற்பட்ட திகைப்புடன் எதிர்ப்பை இவ்வளவு துணிச்சலாக இவ்வளவு பயங்கரமான சொற்களைப் பயன்படுத்திக் காண்பிக்க அனுமதிக்கப்படுகிறார்களே; அந்த அளவுக்கு இங்கே சுதந்திரம் இருக்கிறதே என்று மெய்சிலிர்ப்பும் சேர்ந்து கொண்டது. அமெரிக்க மக்களுக்கு மாவோ சே துங், ஹோ சி மின் இவர்களைவிடப் பெரிய எதிரி லிண்டன் ஜான்ஸன்தான் என்றல்லவா சொல்லி விட்டார் பெஞ்சமின் ஸ்பாக்ஸ்! இவர் குழந்தை வைத்தியத்தில் நிபுணர். குழந்தைகள் பராமரிப்பு பற்றி நூல் எழுதி உலகப் பிரசித்தி பெற்றவர். "அமெரிக்கப் பத்திரிகைகள் குழந்தை வளர்ப்பு பற்றி நான் எதை எழுதினாலும் பிரசுரிக்கின்றன; ஆனால் வியட்நாம் பற்றி நான் எதை எழுதினாலும் போடமாட்டேன் என்கின்றன" என்று குறைப்பட்டுக் கொண்டவரும் இவரே!

சில சர்வகலாசாலைகளில் வியட்நாம் போர் வேண்டாம் என்கிற முறையில் சொற்பொழிவுகளும் ஆர்ப்பாட்டங்களும் நடந்ததைப் பற்றி நான் முன்பே கேள்விப்

பட்டிருந்தேன். ஆனால் அமெரிக்காவில் நான் இருந்த போது இளைஞர்களைப் பட்டாளத்தில் சேர்த்துப் போருக்கு அனுப்பும் சட்டத்துக்கு எதிராக ஒரு பெரிய இயக்கமே நடந்தது. பல்லாயிரக்கணக்கானவர்கள் தலைநகர் வாஷிங்டனில் கூடிப் பட்டாளத்தில் சேரும்படி வந்த உத்தரவை எரித்து எதிர்ப்பைக் காண்பித்துக் கொண்டனர்.

'இதற்கும் அதிகமான பலமான எதிர்ப்பு உருவாக வேண்டும் என்றுதானே ஹனாய் சர்க்காரும் ஆவலுடன் காத்திருக்கிறது? அமெரிக்க மக்களின் வளர்ந்து வரும் அபிப்பிராயத்துக்கு ஜனநாயக அமெரிக்க அரசு இறுதியில் பணிந்துதானே ஆக வேண்டும்? இந்தக் கிளர்ச்சி மேலும் மேலும் வளர்ந்து அமெரிக்கத் துருப்புக்கள் தென் வியட்நாமிலிருந்து வாபஸாகும் என்றுதானே ஹனாய் எதிர்பார்க்கிறது!'

இத்தகைய எண்ணத்துடன் இன்னோர் உண்மையும் எனக்குப் புலனாயிற்று. தெற்கு வியட்நாமை அமெரிக்கர்கள் ஆக்கிரமித்துக் கொண்டு காலனி ஆட்சி நடத்த முயலுகின்றனர் என்று ஒரு குற்றச்சாட்டை கம்யூனிஸ நாடுகள் கூறி வருகின்றனவே! அது எவ்வளவு அபத்தம்! வியட்நாம் போரையும் அமெரிக்க மக்கள் விரும்பவில்லை; அங்கு அமெரிக்கச் சிப்பாய்கள் போகவேண்டியிருப்பதும் அவர்களுக்








கி. ராஜேந்திரன்

படங்கள் : இடமிருந்து வலமாக

1. வியட்காங் தாக்குதலில் பெற்றோரை இழந்த சிறுமி தம்பிக்குத் தாயாகி ஆதரிக்கிறாள். 2. அமெரிக்காவிலுள்ள ஃபோர்ட் பிராக்கில் கொரில்லாப் போர்ப் பயிற்சி பெறும் அமெரிக்க வீரர், வியட்காங் பாணியில் குடிசையில் பதுங்கியிருக்கிறார். 3. இல்லமும் உற்றமும் சுற்றமும் இழந்து வேதனைப்படும் தென்வியட்நாமிய நங்கை. 4 ஃபோர்ட் பிராக்கில் காணப்படும் ஓர் அமெரிக்க வீரரின் கார்ட்டூன். 5. இதே பயிற்சி முகாமில் கொரில்லா யுத்தம் பயில வந்திருக்கும் அமெரிக்க வீரர்கள். 6. வியட்காங் தாக்குதலில் இடிந்து தகர்ந்த இல்லத்திலிருந்து காயமுற்ற குழந்தையைக் காப்பாற்றி வருகிறார் தென் வியட்நாமிய ராணுவ வீரர்.

குப் பிடிக்கவில்லை. காலனி ஆதிக்கத்தை அவர்கள் விரும்புவதாயின் ஜப்பானும் ஜெர்மனியும் இன்றுள்ள நிலையில் திகழ முடியுமா?

வாஷிங்டனில் நான் ஒரு சாலையில் நடந்து கொண்டிருந்த போது, ஒரு வாலிபன் எனக்கு முன்னால் சென்று கொண்டிருந்தான். அவனது பனியனில் முதுகுப்புறத்தில் ஏதோ எழுதப்பட்டிருந்தது. நடையை வேகமாக்கி அவனை நெருங்கிப் பனியனில் கொட்டை எழுத்துக்களில் எழுதியிருந்ததைப் படித்தேன்.

''நான் செத்துப் போனாலும் நிச்சயம் சொர்க்கத்துக்குப் போவேன்; ஏனென்றால், நான் ஏற்கனவே ஒரு முறை நரகத்துக்குப் போய் வந்தாகி விட்டது — வியட்நாம் போரில் பங்குபற்றிவிட்டு வந்தவன் நான்.''

வியட்நாம் போரை நரகம் என்று அவன் வர்ணித்தது நூற்றுக்கு நூறு உண்மைதான். உதாரணத்துக்கு டாக்ஸான் என்ற கிராமத்தில் வியட்காங் புகுந்தபோது நிகழ்ந்தவற்றைப் பார்ப்போம். மாட்டுக் கொம்புகளைப் பயன்படுத்திக் கிராமத்திலிருந்த ஆதிவாசிகளிடம் பேசினார்கள் வியட்காங் கொரில்லாக்கள். தங்களுடன் எல்லாரும் காட்டுக்குள் வந்துவிட வேண்டும் என்றும், 'விடுதலை இயக்கத்து'க்கு உதவ வேண்டும் என்றும் கோரினார்கள்.

கிராமவாசிகள் மறுத்து விட்டதும் வியட்காங் நெருப்புப் பந்தம் வீசுபவர்கள் தங்கள் பணியைச் செய்தார்கள். ஒரு மணி நேரத்துக்குள் கிராமத்திலிருந்த இருநூற்று இரண்டு ஆதிவாசிகள் தீக்கிரையாகி மடிந்தனர். நானூறு பேர்கள் பற்றிய விவரம் தெரியவில்லை !

வியட்காங் இம்மாதிரி அர்த்தமில்லாமல் ஒரு கிராமத்தைக் கொளுத்தியது எதற்காக? ஒரு பாவமும் அறியாத மக்களை, பச்சிளம் குழந்தைகளைத் தீயில் கட்டுப் போசுக்கியது ஏன்? மற்ற கிராமங்களில் உள்ள மக்களுக்கும் அதில் ஓர் எச்சரிக்கை அடங்கியிருந்தது. ''டாக்ஸான் கிராமத்தில் நிகழ்ந்தது உங்களுக்கும் நேரலாம். ஆகவே, வியட்காங் கொரில்லாவுக்கு உதவுங்கள். ஹைகானின் தலைமையை ஏற்காதீர்கள்!'' என்று சொல்லாமல் சொன்ன வார்த்தைகள் !

டாக்ஸானில் எடுக்கப்பட்ட புகைப் படங்கள் வியட்காங் அட்டூழியத்தை நன்கு எடுத்துக்காட்டுகின்றன; பிரசுரத்துக்குக்கூட ஏற்க முடியாத அளவுக்குப் பயங்கரமாக இருக்கின்றன.

வியட்காங்கைவிடக் கொடியவை அந்தக் கானகங்களில் உள்ள விஷப் பாம்புகள். அது மட்டுமா ? காட்டில் நடந்து கொண்டே இருக்கும்போது ஒரு போர்வீரன் வாழை மரம் ஒன்றிலிருந்து ஒரு பழத்தை எடுத்துத் தின்றுவிட முடியாது ! அதில் வியட்காங் விஷம் ஏற்றி வைத்திருக்க மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்? படுக்கப் போகும் போது அமெரிக்க வீரர்கள் சுற்றுவட்டாரத்தில் உள்ள புதர்களை எண்ணி விட்டுப் படுத்துக் கொள்வார்கள் ; சற்று இளைப்பாறி எழுந்திருக்கும்போது ஐந்து புதர்கள் அதிகமாக இருந்தால் எதிரிகள் சூழ்கின்றனர் என்று அர்த்தம் !

பூட்ஸைக் கழற்றி வைத்தால் தலைகீழாகத்தான் வைக்க வேண்டும். நிமிர்த்தி வைத்தால் தேளோ பூரானோ புகுந்து கொண்டுவிடும்! வியட்நாமில் நரகத்தைக் கண்டு வந்ததாக அந்த இளைஞன் சொல்லியதில் தவறென்ன? அவனைச் சந்தித்த வினாடி முதல் அமெரிக்காவில் தங்கி இருந்த இரண்டு மாத காலமும் அமெரிக்க மக்கள் வியட்நாம் போரைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்று தெரிந்து கொள்வதில் மிகுந்த ஆவலுடையவனாக இருந்தேன் நான். பென்டகனில் அமெரிக்க ராணுவத் தளபதிகளிடம் பேசினேன் ; ஃபோர்ட் பிராக்கில் அமெரிக்க வீரர்களுக்கு விசேஷ கொரில்லாப் பயிற்சி அளிக்கப்படுவதையும் பார்த்தேன் ; குடும்பத் தலைவர் தலைவியரிடம் வியட்நாம் பற்றி விவாதித்தேன்.

பல சந்தர்ப்பங்களில் அமெரிக்க அரசாங்கத்தின் கொள்கைகளை அமெரிக்கப் பிரஜை எதிர்க்க, நான் ஆதரித்துப் பேசுகிற விநோதமான நிலை ஏற்பட்டது !

வியட்நாம் போர் சீக்கிரமாக ஒரு முடிவுக்கு வரவேண்டும் என்பதில் யாருக்குமே அபிப்பிராய பேதம் இருக்க முடியாது. ஆனால் எந்தவிதமாக அது முடிய வேண்டும் என்பதில்தான் கருத்து வேற்றுமை.

அமெரிக்க மக்கள் பலரிடம் ஒரு விநோதமான கருத்து பரவியிருப்பதை நான் அறிந்து கொண்டேன். அதாவது பலூனை ஊத ஊத அது வெடித்துவிடும் நிலையை அடைகிறதல்லவா ? அது போல் இன்று கம்யூனிஸமும் படர்ந்து பரவி ஓர் அதிகபட்ச நிலையை அடைந்துவிட்டதென்றும், இனிமேலும் அது புதிய நாடுகளைக் கபளீகரம் செய்யத் தொடங்கினால் வெடித்துவிடும் என்றும் நினைக்கிறார்கள் ! கம்யூனிஸ ஆக்கிரமிப்பு தெற்கு வியட்நாமில் ஒரு வேளை நடக்கலாம்; ஆனால் அதற்கு மேல் பரவாது என்று எண்ணுகிறார்கள். ஆகவே, அமெரிக்க வீரர்கள் வியட்நாமில் போராடுவது வீண் என்கிறார்கள்.

இந்தக் கருத்து என்னால் ஏற்றுக் கொள்ள முடியாததாக இருந்தது. வியட்நாம் விவகாரம் வியட்நாமோடு முடிந்து விடுவதல்ல. அது தென்கிழக்கு ஆசியா முழுவதற்குமான ஒரு பிரச்னை என்பது என் வாதமாக இருந்தது. ''தென் வியட்நாமில் கம்யூனிஸ ஆட்சி ஏற்பட்டால் அதைத் தொடர்ந்து வேறு பல நாடுகளிலும் இதே போன்ற கொரில்லா யுத்தம் பரவும், கம்யூனிஸம் ஊடுருவும் என்பது உறுதி'' என்றேன்.

அமெரிக்க மக்கள் பலருக்கும் வியட்நாம் போர், எங்கோ எதற்காகவோ நடக்கும் போர்! அவர்களுக்குச் சம்பந்தமில்லாத விஷயமாகத் தோன்றுகிறது. இரண்டாவது உலக யுத்தத்தில் அமெரிக்கா தாக்கப்பட்டது ; அமெரிக்க தளங்கள் தாக்கப்பட்டன. அப்போது தாய்நாட்டுக்காகப் போராடுவதாக ஓர் உணர்ச்சி ஒவ்வோர் அமெரிக்கனிடமும் இருந்தது. இன்று அத்தகைய உணர்ச்சி இல்லை.

அன்று தன்னோடு சேர்ந்து போராடப் பல நேச நாடுகள் பக்கபலமாக இருப்பதாக அமெரிக்க வீரனுக்கு ஒரு தெம்பு இருந்

தது. இன்றும் அமெரிக்கா தவிர வேறு சில நாடுகளும் வியட்நாமில் கம்யூனிஸத்தை எதிர்த்துப் போரிட்ட போதிலும் அவற்றின் படைபலம் மிகுதியாக இல்லை; இவ்விஷயம் அதிகமாகப் பிரபலப்படுத்தப்படவும் இல்லை. அமெரிக்கா மட்டுமே முழுப் பொறுப்பையும் தலையில் தாங்கிக் கொண்டிருப்பது போன்ற சூழ்நிலை. இந்தத் தெம்பு இல்லா விட்டால் போகட்டும். தாய்நாட்டில் தங்களது சகோதர மக்கள் ஒருமுகமாக இந்தப் போருக்கு முழு மனத்துடன் ஆதரவு தருகிறார்களா என்றால் அதுவும் இல்லை. 'வியட்நாம் போருக்காகக் கோடிக்கணக்கான டாலர்களை ஏன் கொட்டி அழ வேண்டும்? உலகின் எந்த மூலையிலோ ஜனநாயகத்தைக் காப்பாற்ற நான் எதற்கு அதிக வரி செலுத்த வேண்டும்?' என்று அமெரிக்கக் குடும்பத் தலைவர்கள் முணுமுணுக்கின்றனர். அதிக வரி என்றால் யாருக்குத்தான் இனிக்கும்? எங்கோ தொலைவில் உள்ள நாட்டில் யாரையோ காப்பாற்ற என் மகன் ஏன் போர்முனையில் பிராணனை விட வேண்டும் என்று தாயுள்ளங்கள் துடிக்கின்றன. போரில் செயற்கரிய செயல் புரிந்து உயிர் துறந்த வீரர்களின் தாய்மார்கள் தங்கள் தங்கள் மகனுடைய வீரப் பதக்கத்தைத் தேவையில்லை என்று சொல்லி ஜனாதிபதி ஜான்ஸனுக்கே கோபத்துடன் திருப்பி அனுப்பி வைக்கிறார்கள்.

'வாஷிங்டன் போஸ்ட்' வியட்நாமில் இரண்டு ராணுவ வீரர்கள் பேசிக் கொண்டிருப்பது போல் ஒரு கார்ட்டூன் பிரசுரித்தது. ஒரு வீரன் மற்றொருவனிடம் கூறுகிறான்: ''பென்டகனில் உள்ள கம்ப்யூட்டர் உன்னைப் பற்றி ரொம்பப் பெருமைப்படுவதாக மக்னமாரா சொல்கிறார் !''

''இரண்டாவது உலக யுத்தத்தில் அவ்வளவு தீரத்துடன் குதித்த அமெரிக்க வீரர்கள் இன்று ஏதோ ஒரு கடமையைச் செய்யத்தான் இந்தப் போரில் ஈடுபட்டிருக்கிறார்களே அன்றித் தாய்நாட்டுக்காகப் போராடும் உணர்ச்சி அவர்களிடம் இல்லை. இதுதான், படைபலத்துக்கோ ராணுவ உபகரணங்களுக்கோ குறைவே இல்லாத போதும் அவர்கள் வெற்றி காணச் சிரமப்படுவதற்குக் காரணமோ?'' என்று ஃபோர்ட் ப்ராக்கில் நான் ராணுவத் தளபதி ஒருவரைக் கேட்டேன். அவர் இதை ஒப்புக் கொள்ளா விட்டாலும் மறுக்கவும் இல்லை. வியட்நாம் போரில் ஒரு முடிவு காண இவ்வளவு கால தாமதமாவதற்கு வேறு காரணங்களையும் விவரித்தார் அவர்.

''வியட்நாமில் நாங்கள் நடத்துவது ஒரு விநோதமான யுத்தம். அது முழுமையான யுத்தம் அல்ல. உலக யுத்தத்தின் போது தளபதிகள் சேர்ந்து என்ன வேணுமானாலும் செய்யலாம் — வெற்றி ஒன்றே லட்சியமாக இருந்தது. இன்று அப்படியில்லை. இன்னின்ன நடவடிக்கைகள் எடுக்கலாம்; இவற்றைச் செய்யக் கூடாது என்று கொள்கைகள் வரையறுக்கப்பட்டுள்ளன.''

''கொரில்லாப் போர் முறை உங்களுக்குப் புதிதல்லவா ? அதனால் எதிரிகளை வெல்வது கடினமாக இருக்கிறதா ?''

''கொரில்லாப் போர் முறை எங்களுக்குப் புதிது என்று சொல்ல முடியாது. அமெரிக்க சுதந்திரப் போராட்டத்தின் போதே அமெரிக்கர் கொரில்லாப் போர் முறையைக் கையாண்டிருக்கின்றனர். ஆனால் இன்று வியட்காங் கையாள்வது கொரில்லாப் போர் முறையிலும் மிகக் கொடூரமான ஒன்று. மா சே துங்கின் இந்தப் போர் முறைகள் பற்றியும் நிறைய ஆராய்ச்சிகள் செய்து, பயிற்சியும் அளித்து வருகிறோம்.''

''வியட்காங் கொரில்லாக்களுக்கும் வியட்நாமிய மக்களுக்கும் இடையில் முக ஜாடையில் அதிக வித்தியாசம் இல்லாதது ஒரு பெரிய கஷ்டமல்லவா ? இதனால் ஒளிந்திருக்கும் வியட்காங் கொரில்லாக்களைக் கண்டு பிடிப்பது கடினமாகிறதல்லவா ?''

''உண்மை; இதை யெல்லாம்விட மிகப் பெரிய அசௌகரியம் தென் வியட்நாமிய அரசாங்கம், செவ்வனே அமையாததுதான். இந்தியா சுதந்திரம் பெற்றபிறகு புதிதாக ஆட்சிக்கு வந்தவர்களுக்கு நாட்டை நடத்திச் செல்வதில் அவ்வளவு சிரமம் தெரிந்திருக்காது. ஏனெனில், அரசாங்க இயந்திரத்தை அத்துணை கச்சிதமாக உருவாக்கி வைத்து விட்டுப் போயிருந்தனர் பிரிட்டிஷார். ஆனால் பிரஞ்சு அரசாங்கம் இந்தோ சீனாவில் இதைச் செய்யத் தவறிவிட்டது. தென்வியட்நாமில் திறமையான, பலமான உள்நாட்டு அரசாட்சி இல்லாத போது எங்கள் வேலை மிகக் கடினமாகிறது.'' ■

அவர் கூறியதில் உள்ள பேருண்மை எனக்கு மறு நாள் தினசரியைப் பார்த்த போது புரிந்தது. ''நாம் பிரஞ்சுக்காரர்களுடன் போரிட்டோம்; இப்போது சீனர்களுடன் போரிடுகிறோம்; நாளை அமெரிக்கர்





"வேலை முடிந்ததும் பக்கத்து வீட்டுக்கும் வந்து இரும்புப் பெட்டியைத் திறந்து தருகிறீர்களா? சாவியைத் தொலைத்து விட்டேன்!"

களுடன் போரிடுவோம்" என்று தென் வியட்நாமியத் தளபதி ஒருவரே கூறியிருந்தார்!

தென்வியட்நாமிய மாணவர்கள், "ஏராளமான டாலர்களை இங்கே கொட்டி ராணுவத் தளங்களை அமைத்த பிறகு, இக்தளங்களையும் விட்டு விட்டு அமெரிக்கர்கள் எப்படித் திரும்பு வார்கள்?" என்று ஆர்ப்பாட்டத்தை எழுப்பியதாக இன்னொரு செய்தி.

"நாம் ஏராளமான தென் வியட்நாமியத் தளபதிகளை அரசியல் அரங்கிலே இழந்து விட்டோம்; ஆனால் ஒருவரைக்கூடப் போர் முனையில் இழக்கவில்லை!" என்று தென் வியட்நாமிய அரசியல்வாதி ஒருவர் இதற்கு மூன்று நாட்களுக்குப் பிறகு முழங்கியிருந்தார். இம்மாதிரியான சூழ்நிலையில் அமெரிக்க ராணுவத்தினரின் பணி எத்துணை சிரமமானதாகிறது!

'அப்படியாவது தலைவலியை ஏன் அவர்கள் விலைக்கு வாங்கிக் கொள்ள வேண்டும்?' என்று கேட்டால், 'நாட்டின் கௌரவத்தைக் காப்பாற்ற' என்றுதான் கூற வேண்டும்.

ஏன், ஜனாதிபதி ஜான்ஸனே தேர்தலுக்கு நிற்கும்போது எதிர்க்கட்சியினரான கோல்ட் வாட்டருடைய எந்த எந்த வியட்நாம் கொள்கைகளை எதிர்த்தாரோ, அதே கொள்கைகளைத் தாமே கையாள வேண்டியவரானார். காரணம், ஆள் வேறு ஆட்சி வேறு; ஜான்ஸன் வேறு ஜனாதிபதி வேறு! ஜனாதிபதியான பிறகு அவர் நாட்டின் கௌரவத்தை நினைக்க வேண்டியிருந்தது; ஆக்கிரமிப்பாளர்களை எதிர்க்க உதவுவதாக அமெரிக்கா கொடுத்திருந்த வாக்குறுதிகளைக் காப்பாற்றித் தரவேண்டியிருந்தது. புலியின் வாலைப் பிடித்த பிறகு அதை விடவும் முடியாது; பிடித்துக் கொள்ளவும் முடியாது என்ற நிலைதான்!

ஆகவே, போரைத் தீவிரமாக்கி அதே சமயம் சமாதானத்துக்கும் தீவிரமாக முயலுவது என்று தீர்மானித்தார் ஜான்ஸன். இந்தக் கொள்கை இதற்குமுன் சில தடவைகளில் பலன் தரவில்லை. சமாதானம் கருதி ராணுவக் குறிப்பு மீது குண்டுவீச்சை நிறுத்தினாலோ அல்லது யுத்தத்தை ஒரு பண்டிகையை முன்னிட்டுத் தாற்காலிகமாக நிறுத்தினாலோ அதைப் பலவீனமாகக் கருதிய வியட்காங் அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன் செய்து கொண்டு தங்களைப் பலப் படுத்திக் கொண்டனர்; பெருமளவில் எதிர்பாராத தருணங்களில் அமெரிக்கத் தளங்களைத் தாக்கினர். சைகானில் அமெரிக்க தூதராலயம் உள்படத் தென் வியட்நாமிய நகரங்கள் சிலவற்றின் மீது அண்மையில் வியட்காங் பெருமளவில் நடத்திய தாக்குதல் மிகப் பிரபலமடைந்தது. அத் தருணத்தில் சைகான் ஆட்சிக்கு எதிராகத் தென் வியட்நாமில் பெரும் புரட்சி கிளர்ந்தெழும் என்று ஹனாய் எதிர்பார்த்தது. இந்த ஆசை ஈடேறவில்லை.

ஜான்ஸனின் கொள்கை இம் முறை பலன் தந்துவிட்டது. குண்டு வீச்சை நிறுத்தியதும் ஹனாய் சமாதானப் பேச்சுக்களைத் தொடங்க இசைந்திருக்கிறது. இதற்கு ஜான்ஸன் தாம் ஜனாதிபதி பதவிக்கு மீண்டும் போட்டி இடுவதில்லை என்றும் கூடவே அறிவித்தது காரணமாக இருக்கலாம். தேர்தலில் வெற்றி பெறுவதற்கான நல்வாய்ப்புகள் இருந்தும் அதைத் தியாகம் செய்ய முன்வந்தது ஹனாயில் தலைவர்களது உள்ளத்தைத் தொட்டிருக்கலாம்.

எப்படியாயினும் இந்தச் சமாதானப் பேச்சுவார்த்தைகள் வெற்றி கண்டு வியட்நாம் போருக்கு மட்டுமல்ல; மூன்றாவது உலக யுத்தத்துக்கே ஒரு முடிவு காண வேண்டும் என்று பிரார்த்திப்போம்.

மூன்றாவது உலக யுத்தம் என்று பொருள் உணர்ந்தே கூறுகிறார் ஓர் அரசியல் அறிஞர். கடந்த இருபது ஆண்டுகளாக நடந்துவரும் இந்தக் கம்யூனிஸ யுத்தம் சென்ற இரு உலகப் போர்களைப் போலல்லாது புது மாதிரியானது. நேரடியான ஆக்கிரமிப்பு மட்டுமின்றி மறைமுகமான ஊடுருவலையும் கையாள்வது. எந்தெந்த நாடுகள் இந்தப் படையெடுப்பில் சிக்கியுள்ளன பாருங்கள்: யுகோஸ்லாவியா, கிரீஸ், மலேயா, பிலிப்பைன்ஸ், கியூபா, லாவோஸ், தாய்லாந்து, வியட்நாம், இந்தோனேஷியா, கொரியா, குவாடிமாலா, வெனிசுவேலா, கொலம்பியா, டாமினிகன் ரிபப்ளிக், பொலிவியா, நிகாரகுவா, கம்போடியா, பர்மா, இந்தியா — இத்தனை நாடுகளில் பரவியுள்ள போரை உலகப் போர் என அழைக்காமல் என்னவென்று வர்ணிப்பது?

இந்நாடுகளுள் கம்யூனிஸம் வெற்றி கண்டுள்ள தேசங்கள்: யுகோஸ்லாவியா, சீனா, கியூபா, வடக்கு வியட்நாம், திபெத் ஆகியவை. இத்தகைய வெற்றிகள் கம்யூனிஸத்துக்கு மேலும் கிடைக்காமல் ஒற்றுமையுடன் இருந்து போராட வேண்டியது ஜனநாயக நாடுகளுடைய கடமை.



## நீலகிரி எக்ஸ்பிரஸ்

**மை**சூர் போண்டாவில் மைசூர் இல்லையே என்று அங்கலாய்த்துப் பயன் என்ன? அதே போலத்தான் — நீலகிரி எக்ஸ்பிரஸ்.

நீலகிரிவரைக்கும் போகவில்லை, காட்பாடியோடு நின்றுவிட்டதே என்று அங்கலாய்க்க முடியுமா? செண்டிரல் ஸ்டேஷனை விட்டே புறப்படாமல் இருந்திருந்தால் என்ன செய்திருக்கப் போகிறோம். ஏதோ இவ்வளவாவது போகிறதே என்ற திருப்திதான்!

கதை துப்பறியும் கதை என்று பெயர். அதில் கதை இருக்கிறதா? துப்பு இருக்கிறதா ஒன்றுமில்லை. உப்புச்சப்பு இல்லாத கதைதான்!

இருந்தாலும் ஒரு தடவை பார்த்து வைக்க வேண்டியதுதான் — சோவின் நடிப்புக்காகவும் ஹாஸ்ய வசனங்களுக்காகவும் என்று சொல்லவேண்டியிருக்கிறது.

ரொம்ப நாளைக்குப் பிறகு சினிமாவில் பரதநாட்டியம் காணும் வாய்ப்பு இப்படம் பார்ப்பவர்களுக்கு வாய்க்கும்.

அசோகன் ஒற்றைக் கண்ணுடனும் மொட்டைத் தலையுடனும் தமது பங்கைச் சரிவரச் செய்திருக்கிறார்.

ஜெய்சங்கர், விஜய லலிதா இவர்களும் தங்களுக்குக் கிடைத்த பகுதியை மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல் செய்திருக்கிறார்கள்.

முன்னெல்லாம் பிரதான கதை கொஞ்சம் கனமாக உணர்ச்சிகரமாக இருக்குமே என்று நகைச்சுவை சேர்ப்பார்கள்.

ஆனால் சோ அந்தச் சம்பிரதாயத்தை முற்றிலும் மாற்றிவிட்டார்.

சோவின் நகைச்சுவைக்குக் கொஞ்சம் கொலை, குத்துச் சண்டை எல்லாம் ஊறுகாயாகப் பயன்படுகிறது!

வேட்கை தணிக்க

தாகம் இனிக்க

# ஜோலா-கோலா

## வின்ஸென்டின்

## நவீன பானம்

ஜில்லிட்டு அருந்துங்கள்




VC-104-A



"என்னப்பா, வயிற்று வலியா? உனது தாயாரை பயோ-ஸால் கொடுக்கச் சொல். அது குழந்தைகளை ஆரோக்கியமாகவும், சந்தோஷமாகவும் இருக்கச் செய்கிறது"

TAMIL






# பயோ-ஸால்

(கிரைப் மிக்சர்)

ஜே. & ஜே. டிஷேன்

ஹைதராபாத் - இந்தியா




மாணவர் உலகில் மினர்வா நோட்ஸும், டுட்டோரியல் காலேஜும் ரொம்பப் பிரசித்தம். இக்கல்லூரியின் தலைவர் கட்டிய வீடு இது.





'மோஹினி' என்ற சம்ஸ்கிருதச் சொல் லுக்கு மகிழ்ச்சி தருவது என்று பொருள். 28 அடி நீளம், 12 அடி அகலம் உள்ள 'மோஹினி'க்குள் நுழைந்தவுடனேயே நமக்கு ஆனந்தம் பிறக்கிறது. குளியல் அறைக்கு வெளியே ஒரு சாய்வு மேஜை. மேல் பலகை யைத் தூக்கினால், உட்புறம் ஒரு முகம் பார்க் கும் கண்ணாடி; கீழே கை, முகம் கழுவிக் கொள்ள ஒரு பேஸின். அடுத்த அறை சமை யலறை. சமையல் கலை பற்றி அறியாதவர் களுக்குக் கூட 'நாமே சமைத்துப் பார்க்க லாமே!' என்று ஆவலைத் தூண்டும் வண்ணம் அமைந்துள்ளது. அறைகளுக்கிடையே கதவு களும் இல்லை; உயரமான நிலைப்படிகளும் இல்லை. மின் விளக்கு 'ஸ்விட்ச்', புத்தக அல மாரி எல்லாமே தரையிலிருந்து 3 அடி உயரத் துக்குள் அமைந்துள்ளன. ஏனென்றால் இந்த வீடு கால் சுவாதீனமற்றவர்களுக்காகக் கட் டப்பட்டது. சக்கர வண்டியில் உட்கார்ந்த படியே வீட்டின் எல்லாப் பகுதிகளுக்கும் பிறர் உதவியின்றிச் செல்லலாம். திரு ஏ. என். பரசுராமன் தமக்கென, தாமே திட்டமிட்டுக் கட்டிய வீடு இது.

''இதற்கு எவ்வளவு செலவாயிற்று?'' என்று கேட்டதற்கு திரு பரசுராமன் கூறினார்: ''முப்பதாயிரம்; ஆனால் விலை உயர்ந்த சில உபகரணங்களைப் பொருத்தி இருப்பதால் இந்தச் செலவு. ரூ. 18,000க்கு மேல் போகா மல் நல்ல முறையில் கட்டி விடலாம்.''

பரசுராமனுக்குக் குழந்தையாக இருந்த போதே இடது கால் சுவாதீனமற்றுப் போயிற்று. ஆயினும் அங்கஹீனத்தினால் அயர்ந்து விடாமல் பல ஆண்டுகள் ஒரு கோலின் உதவியுடன் எல்லா இடங்களுக்கும் போய் அலுவல்களைக் கவனித்தார்.

துரதிர்ஷ்ட வசமாக 1964ல் ஒரு மோட் டார் விபத்தில் சிக்கிய இவர் இனி கோலின் துணை இருந்தாலும் நடமாட முடியாது எனக் கண்டார். ஆகவே கால்கள் இழந்தவர்களுக் கென்றே தயாரிக்கப்படும் ஒரு நவீன சக்கர நாற்காலியைத் தருவித்து அமர்ந்து எல்லா இடங்களுக்கும் போய் வரத் தொடங்கினார். இந்தச் சந்தர்ப்பத்தில் தம்மைப் போலவே அங்கஹீனமுற்றவர்களுக்கும் பலவிதங்களில் உதவும் நோக்கத்துடன் ஒரு தர்ம ஸ்தாப னத்தை நிறுவ வேண்டும் என்ற யோசனை உதித்தது அவருக்கு. அங்கஹீனமுற்றவர் களுக்கு நேரடியாக உதவுவது தவிர அவர்கள் பால் மக்களிடையே நல்லெண்ணத்தை வளர்ப்பது, அங்கஹீனமுற்றவர்களுக்கு அயல் நாட்டு அரசாங்கங்கள் எந்த விதத்தில் உதவுகின்றன என்பதை நமது அரசினருக்கு எடுத்துக் காட்டுவது முதலியன இந்த ஸ்தா பனத்தின் சில நோக்கங்கள்.

''மேலை நாடுகளில் என் போன்ற நடக்க முடியாதவர்கள் பிறர் உதவியின்றிச் செல்ல நூலகங்கள், ஹோட்டல்கள் எல்லாம் பிரத்தி யேகமாக அமைந்துள்ளன. இங்கு அந்த வச திகள் ஏதும் இல்லை. கை, கால் சுவாதீனமற் றவர்களுக்குப் பிறர் கையை எதிர்பார்த்து வாழப் பிடிக்காது. நம் நாட்டில் அத்தகை யோருக்கு மகிழ்ச்சிகரமான வாழ்க்கையை வருங்காலத்திலாவது அமைத்துத் தந்தால் நல்லது'' என்றார் திரு பரசுராமன். —ரா.பா.


CIBA
பட்டின் வழவழப்பு, மெல்லியரின் மென்மை
வஸந்தத்தின் பொலிவு ...


Binaca
Talc
Binaca
Talc
Binaca
Talc


துர்மணத்தை நீக்கி குளுமையான புத்துணர்ச்சியூட்டும்
நேர்த்தியான நறுமணம்
பினகா
பரிமள பவுடர்
துர்கந்த மகற்றி
சருமத்தை மென்மையாக்கும்
திரிவகங்கள் அடங்கியது.



# இனிக்கும் நினைவுகள்

கோமகள்



"லேபர் கேஸ் ரெக்கார்டுதான் எழுதுகிறேன். எனக்காக முதல் கேஸை விட்டுக் கொடுத்ததற்கு நன்றி" என்றான் வசந்தன் சிலியாவிடம்.

அந்த நன்றியை அவள் மனதார வரவேற்கவில்லை. கொஞ்சம் வேடிக்கையாக அவனைப் பார்த்து விட்டு, "இன்றைக்கு நமக்கு இரண்டு கேஸ்களாவது கிட்டும் போலுள்ளது. உரிய நாட்களுக்குள் நமக்கு வேண்டிய எண்ணிக்கை கிடைத்து, மேலேயே போய் விடும் போலுள்ளது" என்றாள் சிலியா.

"இன்றிரவு...." தயங்கிய வசந்தன் சிலியாவைப் பார்த்து "நீங்கள் தவறாக நினைக்கவில்லை என்றால் ஒரு உதவியை வேண்டுகிறேன்..." என்றான்.

"என்ன?"

"மாலை நான்கு மணிக்கு வேலையாக ஓரிடம் செல்ல வேண்டியிருக்கிறது. இரவு ஏழரைக்குத் தவறினால், எட்டுக்கு வந்துவிடுவேன். அதுவரையில் நீங்கள்...."

"இவ்வளவுதானே?" இப்படிக் கேட்ட முக பாவத்தாலேயே அந்த உதவி செய்ய ஏற்றுக் கொண்ட மனம் தெரிந்தது.

"நன்றி!" — வசந்தன் எழுந்தான். நிலவின் குளிர்ந்த ஒளியில் நடப்பது போல் அவன் நடந்து தன் அறைக்கு வந்தான். ஹாண்டலிலிருந்து பையன் எடுத்து வந்த இட்டிலிகள் காய்ந்து கிடந்தன. பசிக்கு ருசி தெரியவில்லை. ஆறிக் கிடந்த பாலைக் குடித்து விட்டுப் படுக்கையில் சாய்ந்து விட்டான். சிறிது நேரத்திலேயே அவனைச் சுற்றி நடந்த நடப்புக்கள் மங்கலாகிப் பின் மறைந்தன.

ஃ ஃ ஃ

மாருதம் தவழும் மாலைப் போது. நோயுற்றும் களைத்துமிருந்த உடம்புகள் தலை சீவி மாற்றுடை யணிந்து சானடோரியத்தின் ஒரே நீண்ட வீதியில் நடை பயின்று கொண்டிருந்தன. செல்லம்மாள் மட்டும் வேலைக்காரி அப்போது தான் புதிதாக வாங்கி வந்திருந்த சிறிய கரியடுப்பை மூட்டிப் பாலைச் சூடாக்கிக் கொண்டிருந்தாள். 'அம்மா!' என்று குரல் கேட்டுத் திரும்பியபோது திவாகரன் நின்றிருந்தான்.

"நான்தான் திவாகர். வசந்தன் என்னை அனுப்பி வைத்தான்."

"தெரியும், அப்பா! உட்காரு!" தன் கட்டிலருகே கிடந்த ஸ்டூலைத் தள்ளிவிட்டாள் செல்லம்மாள். "உன் போட்டோ கூட, வசந்தன் கொடுத்திருக்கிறானே!"

"உடம்பு நன்றாக உள்ளதாம்மா?" என்று கேட்டுத் திவாகரன் பையிலிருந்த ஆரஞ்சுப் பழங்களை எடுத்துப் படுக்கையில் வைத்தான்.

"இதெல்லாம் எதற்கப்பா? தினமும் டஜன் கணக்கில் பழம் வாங்கிக் கொடுத்தால் திடீரென்று என் உடம்பு சரியாகி விடுமா? அல்லது என்னால் சாப்பிடத்தான் முடியுமா?"

திவாகரன் கொஞ்ச நேரம் அந்த அன்னையின் முகத்தை உற்று நோக்கினான். முகத்தின் களையோ, காந்தியோ குன்றிவிடாத தோற்றம். ஆயினும் உடம்பு எலும்புக் கூடாக வற்றியிருந்தது. அவள் கண்களில் வசந்தனைப் பற்றிப் பேசும்போது ஒளி மின்னும். அன்னையின் அணைப்பையே உணர்ந்திராத திவாகரனுக்கு அந்த நேரத்தில்

நெஞ்சமெல்லாம் ஈரமாகிப் பாசமாகப் பெருகியது.

''அம்மா! உங்கள் நினைவில் வசந்தன் உருகி விடுவான். உங்களைப் பற்றிப் பேசும்போது அவனைப் பொறுத்த வரை அவன் உள்ளமெல்லாம் அன்பு அன்பு — அன்புதான்! உங்கள் உடம்புக்கு வந்திருக்கும் நோய் அவனது உள்ளத்தையே பிடித்து விட்டது.''

செல்லம்மாவுக்கு வசந்தனின் துயரம் வருத்தத்தை ஊட்டியது. ''பாரப்பா திவாகர். நீயாவது அவனுக்குப் புத்திமதி சொல்லேன். என்னைத் தவிர இந்த உலகில் எதுவுமே இல்லையா? எனக்கு நோய் வந்தால் அதைக் கவனிக்கட்டும். அதற்காக இடிந்து விடலாமா? இப்படி மனம் கலங்கி மக்கள் துயருறவா நான் பாடுபட்டு வளர்த்தேன்? வாலிப வயதில் தெம்பும் தைரியமும், உல்லாசமும் குதூகலமுமாக இருப்பதை விட்டு, ஓயாமல் என் நினைவிலேயே உழன்றால் அர்த்தம்தான் என்ன? என் பொருட்டு யாருமே வருந்தி யழாது. மகிழ்ச்சியான



மனத்தோடு என்னை நோக்கினால் அது தான் எனக்கு அளிக்கும் ஆறுதலாக இருக்க முடியும்...!''

திவாகரன் பொட்டலங்களைப் பிரித்துச் செல்லம்மாவிடம் கொடுத்தான். அவள் அந்த அன்புக்காகக் கொஞ்சம் சாப்பிட்டாள். கொஞ்சம் பாலை எடுத்து அவனிடம் பருக ஈந்தாள். ''முதன் முதல் நீங்கள் தரும் பாலானதனால் பருகுகிறேன். மறுமுறை இந்த உபசாரம் வேண்டாம், அம்மா. டாக்டர்களாகிய நாங்களே நோயாளிகளின் உணவை உண்ண முற்பட்டால் அது நல்லதில்லையே...!'' என்ற திவாகரன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு விடைபெற்றான்.

அவன் போன சிறிது நேரத்துக்கெல்லாம் வசந்தன் வந்து, ''எப்படி அம்மா இருக்கே?'' என்று கேட்டான்.

''ஏண்டா பைத்தியம்! இந்த நேரத்துக்கு விழுந்தடித்துக் கொண்டு ஏன் ஓடி வருகிறாய்? உன் நண்பன் திவாகரன் தான் வந்துவிட்டுப் போகிறானே? நாலு தினங்களுக்கொரு முறை வருவதாகக் கூறிவிட்டு மறு நாளே நீ வந்து விட்டாயே!''

''என்னம்மா இது? உன்னைப் பார்க்க ஆவலாக வந்தால், ஏன் வந்தாய் என்கிறே. பார்க்கணும் போலிருந்தது; வந்தேன்....''

''பார்த்தாச்சோல்லியோ? புறப்படு. இருட்டிவிடும்.''

''என்னம்மா வந்ததும் வராததுமாக விரட்டறதிலேயே இருக்கிறாயே! அம்மா! நான் உன்னிடம் ஒன்று கேட்கலாமா?''

''என்ன? தாராளமாகக் கேளு!''

''ஏனம்மா! நான் பிறந்த போது உனக்குக் கஷ்டப் பிரசவமா? சாதாரணப் பிரசவமா?''

''இது என்னடா கேள்வி? சாதாரணமானதுதான். வர வர உனக்கு..''



''வந்து அம்மா, தாய்மை என்பது பெருங் களிப்பு. ஆனல் அதை ஒரு பெண் அடையுமுன் எவ்வளவு கஷ்டப்பட்டு விடுகிருள்? ஐயோ! நினைத்தாலே நடுங்குகிறதேம்மா...''

''ஏண்டா நீ ஒரு டாக்டரா? இப்படி மனம் தளருகிறயே! இறைவன் சிருஷ்டி அப்படி. நீ ஏன் கலங்கறே?''

''இத்தனை அவதியுற்ற அன்னைக்கு ஈடு ஏது? முதல் தெய்வம் ஒருவனுக்குத் தாய். பிறகுதான் எல்லாம்.''

''ஓ! சுற்றிச் சுற்றிப் பேச்சை என்னிடமே கொண்டுவந்து விட்டாயாடா? கோழை!''

''இரவு ஒரு பிரசவம் பார்க்க நேர்ந்தது அம்மா. தாய்மையின் வேதனையையும், தவிப்பையும், அதைத் தொடர்ந்து வரும் அவளின் பெருங் களிப்பையும் கண்டு பக்தியில் சிலிர்த்து விட்டேன், அம்மா! அங்கு கண்ணெதிரே காணும் தாய்மையின் எல்லையற்ற தியாகத்தில் பொறுமையின் எல்லையில் கடவுளைக் காணும் நடுக்கம் உண்டாயிற்று. பிறகு உன்னைக் கண்ட ஆனந்தம் ஏற்பட்டது.''

செல்லம்மாள் மகனை விந்தையுறப் பார்த்தாள். அவனது படபடப்பும், எங்கோ லயித்த கண்களும், சிறிது நேரத்துக்கு முன் அவனிடம் தோன்றியிருந்த குழைவையும், சிறுபிள்ளைத் தனத்தையும் மாற்றிவிட்டன.

''நேற்றிரவு தூக்கமே வரவில்லை, அம்மா. உன்னைக் கண்டால்தான் அமைதி ஏற்படும் போலிருந்தது.''

''இப்படி உணர்ச்சி வசப்பட்டால் எப்படிடா? எழுந்து கிளம்பு. நாளை வராதே. நான்கு தினங்கள் கழித்து வா. திவாகரனைக் கூடத் தினமும் வரச் சொல்லாதே.''

வசந்தன் செல்லம்மாவின் கால்களை வருடினன். சட்டெனத் தன் முகத்தை இரு கால்களிலும் பதித்துக் கொண்டான். பிறகு எழுந்து, ''வரட்டுமா, அம்மா! எனக்காக மருந்து சாப்பிடு. எனக்காக உன் உடம்பு குணமாகும். எனக்காக நிறைய உணவு சாப்பிடு. எனக்காக உனக்குப் பசி எடுக்கும்'' என்றவாறே நகர்ந்தான்.

வசந்தனின் கை அசைவுகள் தொலைவில் தெரிந்தன.

# 3. துளசி மணம்

''**கா**ப்பியம்'' தமிழ் வாராந்திரப் பத்திரிகைக் காரியாலயம் ஏகச் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தது. பொழுது சாயும் நேரமாகி விட்டது. மறு நாள் வெளிவர வேண்டிய இதழ் தயாராகி வெளியூர்ப் பார்சல்களாகவும், உள்ளூர்க் கட்டுகளாகவும் பிரிக்கப்பட்டுக் கொண்டிருந்தன. வரவேற்பு அறையை அடுத்த வலதுபுற அறையில் கண்ணாடிப் பலகையிட்ட மேசையருகே குறிப்புக்களைச் சரி பார்த்தவாறே அமர்ந்திருந்தார், 'காப்பியத்'தின் அதிபரும், ஆசிரியருமான மீனுட்சிசுந்தரம். மேசையின் மீது படிந்திருந்த கண்ணாடிப் பலகையில் திருப்பதி வேங்கடாசலபதியின் படமும், திருமுருகன் படமும் தெரிந்தன. மேசையின்மீது அழகாக அடுக்கப்பெற்ற காகிதங்களின் மேல் 'கண்ணாடி பேப்பர் வெயிட்' பளபளத்தது.

அறையின் அரைக் கதவுகளின் கீழ் இரு கால்கள் தயங்கி நின்றன.

''வரலாம்'' என்றார் மீனுட்சிசுந்தரம். அவரது கம்பீரமான உருவம் நிமிர்ந்து உட்கார்ந்தது.

வந்தவர் ஆசிரியர் குழுவைச் சேர்ந்த நிர்மலன். அவர் தந்த குறிப்பில் அன்று காலை மீனுட்சிசுந்தரம் யோசித்த தீர்மானங்கள் இருந்தன. பத்திரிகை வளர்ச்சிக்குத் தூய்மையான மனமும், தொண்டு செய்யும் ஆவலும் இருந்தால் மட்டும் போதுமா? வியாபார நோக்கமும், விளம்பர நோக்கமும் கூடத் தேவைதானே! அதன் மூலம் அவர் யோசித்து உருவாக்கிய திட்டம் தான் அது. நல்ல தரமுள்ள கதைகளைக் காண ஒரு பலத்த போட்டிக்கு அறிவிப்புத் தரப்பட்டது! மூன்று பரிசுகள் சிறுகதைகளுக்காக!

''அறிவிப்பு அழகாக உள்ளது. இதை வெளியிட்ட அடுத்த பக்கத்தில் 'தமிழரசி'யின் குறுநாவலை எதிர் பாருங்கள் என்று முழுப் பக்க அளவுக்கு மற்றொரு விளம்பரம் தயார் செய்யுங்கள்.''

''ஸார்! தமிழரசி எழுதிய குறுநாவல் எதுவும்......''

''எதுவும் இல்லை என்றால், உடனடியாக அவர்களுக்கு ஃபோன் செய்து தர முடியுமா என்று கேளுங்கள். தமிழரசியின் கதைகளுக்கு நல்ல வரவேற்பு இருக்கிறது. ரசிகர்களின் கடிதங்கள் அதிகம் வருகின்றன. அவர் எழுத்தில் புதுமையும் கவர்ச்சியும் இருக்கின்றன.''

''ஆனல்.... அவர்களின் ஹாஸ்டல் முகவரிக்கு ஃபோன் செய்தால் சரிவர

# சிந்தால் சோப் விசேஷச் சலுகை!

## 15 பைசா மிச்சப்படுத்துங்கள்.

உங்கள் மனத்திற்குகந்த சிந்தால் சோப்பை நீங்கள் இப்போது 15 பைசா குறைந்த விலையில் பெற முடியும். நீங்கள் செய்ய வேண்டியது இதுதான்: புள்ளிக் கோடு வழியே இக் கூப்பனைக் கத்தரித்து, உங்கள் கடைக்காரரிடம் கொடுங்கள். மறவாமல் அடுத்துவரும் சிந்தால் விளம்பரங்களிலும் இக் கூப்பன் வருவதைக் கவனித்து உபயோகியுங்கள்.

**ஜி-11 (ஹெக்ஸாக்ளோரபீன்) சேர்ந்த சிந்தால் சோப் கிருமிநாசினி மட்டுமல்ல; உடம்பிலுள்ள துர்நாற்றத்தையும் அகற்றுகிறது!**

## 15 பைசா மிச்சம்!




**சிந்தால் கூப்பன்**

இதை உங்கள் கடைக்காரரிடம் கொடுங்கள்.

திரு/திருமதி குமாரி ..............................................................

விலாசம் ..............................................................................

நான் வழக்கமாக உபயோகிப்பது ........................ டாய்லெட் சோப்.

K MS

# தொழில் மந்த தொழில் சமாளிக்க தொழில் தொழில் தேவைப்படுகிறது

எந்த தொழிலிலும் மந்த நிலை ஏற்படுவது சகஜமாகத்தான் இருக்கிறது. நாங்களும் மந்த நிலையை எப்படி சமாளித்து நிலைபெறச் செய்கிறது என்று கவலைப்படலாம். ஆனால் இண்டியன் ஆக்ஸிஜன் ஸ்தாபனத்தில் அப்படி ஓய்ந்துவிடுவது பழக்கமில்லை. தொழிலில் மந்த நிலை என்றாலே அதை ஒரு சவாலாக ஏற்றுக்கொண்டு விடுவோம். நாங்கள் இந்நிலையை சமாளிக்கும் முறைகள் சிலவற்றைக் குறிப்பிடுவோம்.

• தாரணமாக எமது மார்கெடிங் பிரிவில் தென் கிழக்கு மற்றும் மேற்கு ஆசிய நாடுகளிலும் ஆப்ரிக்காவிலும் ஏற்றுமதி செய்வதை மேன்மேலும் அதிகரிக்க ஆராய்ச்சியை தொடர்ந்து நடத்தி வருகிறோம்.

எமது என்ஜினியர்களும் விஞ்ஞானிகளும் விரிவான ஆராய்ச்சியின் மூலம் சிறப்பு மிக்க அநேக புதிய தயாரிப்புகளை உருவாக்கி அந்நிய செலாவணியை நிறைய சேமிக்க முயற்சித்து வருகிறார்கள். சென்ற ஆண்டில் மட்டுமே இறக்குமதி செய்யப்படவேண்டிய அநேக பொருள்களை இங்கேயே உற்பத்தி செய்து ரூ. 36 லட்சத்திற்கு அதிகமான அந்நிய செலாவணியை மிச்சமாக்கியிருக்கிறோம். தொழில் துறைகளுக்காக இந்நாட்டு மூலப் பொருள்களைக் கொண்டே இண்டியன் ஆக்ஸிஜன் முதல் முறையாகத் தயாரித்து வழங்கிய புத்தம் புதிய தயாரிப்பு வெல்டிங் வேலைக்காக உள்ள இண்டார்க் ஜாம்ஆர் 300 ஸெலேனியம் ரெக்டிபையர் செட், இண்டார்க் ஸப்மர்ஜ்ட் ஆர்க் வெல்டிங் வயர் மற்றும் ப்ளூஸார்க்/ஸிஓ2 ஆடொமாடிக் ஆர்க் வெல்டிங் வேலைக்கான தொடர்பான கவசமுள்ள எலக்டிரோடு முதலியவை.

இந்தியத் தொழில்களில் உற்பத்தியை அதிகரிக்கவும், தயாரிப்பு நுட்பங்களை அபிவிருத்தி செய்யவும் சிறப்பாக உதவும் வகையில் ஆக்ஸிஜன், நைட்ரோஜன் மற்றும் இதர வாயுக்களுக்கு புதிய உபயோக முறைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

இன்னும் அநேக துறைகளில் புதிய சிருஷ்டிகள் தொழில் திறமையை விருத்தி செய்து, தொழில் மந்தத்தின் விளைவுகளை ஜயிக்க உதவுகின்றன.

இந்தியப் பொருளாதாரத்திற்கு சேவை புரிவதில் அநேக மார்க்கங்கள் தொடர்ந்து கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன. இண்டியன் ஆக்ஸிஜன் தன்னுடைய எதிர்கால வளர்ச்சியில் மட்டுமின்றி நாட்டின் எதிர்கால மேன்மையிலும் நம்பிக்கை வைத்திருக்கின்றது.

**IOL இண்டியன் ஆக்ஸிஜன் லிமிடெட்**

அவர்கள் கிடைப்பதில்லை. கடிதம் எழுதினால் உடனடியாகப் பதில் தெரிந்து விடலாம்!''

''நாளாகி விடாதோ?''

''இன்று நாம் கடிதம் எழுதிவிட்டு நாளை அவர்களை ஃபோனில் முடிவைக் கூறச் சொன்னால்......''

''அப்படியே செய்யுங்கள்.''

நிர்மலன் அறையை விட்டு வெளியேறியதும் மீனாட்சிசுந்தரம் யோசனையோடு தூரப் பார்த்தார். காரியாலய ஊழியர்கள் வேலை முடிந்து வீட்டுக்கு ஏகிக் கொண்டிருந்தனர். பகல் ஒளி மங்கிக் கொண்டே வந்தது. மீனாட்சிசுந்தரம் அங்கவஸ்திரத்தைத் தோளில் போட்டுக் கொண்டு வெளியே வந்தார். வாயில்காப்போன் வணக்கம் தெரிவித்து வழியனுப்பினான். டிரைவர் ஓடி வந்து கதவைத் திறந்தான்.

காந்தி நகரில் உள்ள அவரது அழகிய மாளிகை வாசலில் வந்து நின்றது கார். மணக்கும் தோட்ட மலர்களின் சுகந்தத்தை அநுபவித்தவாறே இறங்கிய அவர் குளிர்சாதனம் பொருத்தப்பட்ட அறைக்குள் சென்று அமர்ந்தார். பின்னோடு கதவு திறக்கப்படுவது கண்டு நிமிர்ந்த அவர் முகம் மலர்ந்தது.

''வா, அம்மா, குழலீ! என்ன வேணும்?''

''ஒரு தையல் மெஷின் வேண்டும், அப்பா!''

''தையல் மெஷினா?''

''ஆமாம், அப்பா!''

''வாங்கித் தருகிறேன். ஆனால் ஒரு நிபந்தனை. என் துணிகளையெல்லாம் நீ தைத்துத் தருவதாக ஆரம்பித்துவிடக் கூடாது!'' சிரித்தார் மீனாட்சிசுந்தரம்!

''போங்கப்பா! எப்போ பார்த்தாலும் கேலிதான் உங்களுக்கு!''

அறைக் கதவு மீண்டும் திறக்கப்பட்டது. ஸரஸ்வதி அம்மாள் கையில் காப்பியோடு உள்ளே வந்தவள், ''அப்பாவும், மகளும் என்ன பேசுகிறீர்கள்?'' என்று கேட்டாள்.

''உன் மகளுக்குத் தையல் மெஷின் வேண்டுமாம்.''

''ஓ! அப்பா வந்ததும் தனக்கு வேண்டியதைக் கேட்கத் தெரிகிறது. வந்தவருக்குக் காப்பி தர வேண்டும் என்று தோன்றவில்லையே. இது என்ன வழக்கமடீ குழலீ உனக்கு?''

''அவளைக் கடியாதே. நீ செய்ய வேண்டிய பணியை அவள் ஏன் செய்ய வேண்டும்?''

''நல்ல அப்பா செல்லம்! நீங்கள் காப்பியைச் சாப்பிடுங்கள். நான் போகிறேன்.''



குற்றத்தை ஒப்புக் கொள்வது நேர்மையின் முதல் படி.

—ஜப்பானியப் பழமொழி

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

மீனாட்சிசுந்தரம் காப்பியை ருசி பார்த்தவாறே, ''ஏனம்மா, குழலீ! திடீரென்று தையல் மோகம் உனக்கு எப்படி வந்தது?'' என்று கேட்டார்.

''ஸீலியா விணாகிவிடும் துணிகளைச் சின்னச் சட்டைகளாகவும், பாவாடைகளாகவும் தைத்துத் தெருவில் கிடக்கும் ஏழைச் சிறுவர்களுக்குத் தருகிறாள், அப்பா! அப்படியே நானும் செய்யப் போகிறேன். நல்ல பணியில்லையா அது? சித்தப்பா ஸீலியாவை ரொம்ப ரொம்பப் புகழ்ந்தார், அப்பா!''

மீனாட்சிசுந்தரம் மௌனமாக மனைவியைப் பார்த்தார். அவள் கண்கள் கலங்கியிருந்தன. உள்ளூறப் பொங்கிப் பிரவகிக்கும் துயரத்தைக் கடந்த இருபது வருடங்களாக மெல்ல முயன்றும், அதன் தோல்வியில்தான் அவள் படபடத்தாள்.

''நாளைக் காலையில் ஸீலியாவுக்குப் பிறந்த தினமாம். விரோதமோ வருத்தமோ ஒரு சிறிதும் பாராட்டாமல் நாமெல்லாம் அவள் வீட்டுக்கு வர வேண்டுமாம். ஸீலியா அழைத்து விட்டுப் போயிருக்கிறாள்.''

''நடந்துவிட்டவைகளுக்கு வருந்தாமல், உன் பாசங்களுக்கு வழிவிட்டு ராகவனிடம் முன்போல் அன்பாகவே இரு, ஸரஸ்வதி. நீயும் கடந்ததைக் கனவாக நினைத்து...''

''எப்படிங்க முடியும்? பொழுது விடிந்தால் எதற்கு வாழ்கிறோம் என்ற நோக்கமே இல்லாமல், இந்த வீட்டின் எல்லா வேலைகளையும் தலையில் தூக்கிப் போட்டுக் கொண்டு தன்னையே அழித்துக்கொள்ளும் அவள் என் உடன் பிறந்த பிறப்பில்லையா? அவளது ரகசியக் கண்ணீரில் அழிபடும் சின்ன வயசு ஆசைகளையெல்லாம் ஒரு நிமிஷத்தில் அழித்து விட்டு, உங்கள் தம்பி இப்படி ஆங்கிலப் பெண்ணை மணந்து....''

''அவன் செய்துவிட்ட குற்றத்துக்கு நான் மன்னிப்புக் கோருகிறேன். ஆனால் யோசித்துப் பார். ஏதோ அவன் அப்படி நடந்து கொண்டாலும் அவனாக உன் தங்கையை ஒதுக்கி வைத்துவிடவில்லையே. அவன் தவற்றை அவள் மன்னிக்கவே விரும்பவில்லை. நானும்தான் எவ்வளவோ எடுத்துக் கூறினேன். அவள்தான் மறுத்து

விட்டான். என்ன செய்வது? அதை இப்படியே வளர்த்துக் கொண்டே போனுல்...''

''நீங்கள் வேண்டுமானுல் நாளை போய்வாருங்கள்!'' —ஸரஸ்வதி இதைக் கூறிய சுவட்டோடு திரும்பி நடந்தாள்!

குழலி எப்போதோ அவ்விடமிருந்து போய்விட்டிருந்தாள். மீனாட்சி சுந்தரம் நீண்ட பெருமூச்சோடு சோபாவில் சாய்ந்து கண்களை மூடிக்கொண்டார். இறந்த காலங்களின் இன்ப துன்ப ஏக்கங்கள் நிழல்களாகத் தொடர்ந்து, எதிர்கால உணர்ச்சிகளைப் பாதித்துவிடும் விந்தைதான் என்ன? இந்த ஸரஸ்வதி, ராகவனிடம் எத்தனை அன்பாக, இதமாக, கனிவாகப் பழகியவள்! அவள் மனத்தில் இப்போது மூண்டுவிட்ட கசப்பின் அளவைக் கணக்கிட முடியுமா?

ஸரஸ்வதி பின்பக்கம் வந்தபோது மலரப் போகும் அரும்புகளை அழகாகத் தொடுத்துக் கொண்டிருந்தாள் துளசி. விரல்களுக்கும் நாருக்குமிடையே சிக்கும் மலர்கள் சரம் சரமாகக் கோத்து வழிந்தன. இந்த மலர்களின் நேர்த்தியும் மணமும், சூடி அழியப் போகின்றன. அவளோ? துளசியோ, பவித்திரமான துளசி இலைகளின் புனிதத்தோடு இருந்துவிட்டு, வெறும் வார்த்தைகளின் ஆராதனையில் வாழ்ந்து முடியப் போகிருள். முன் நெற்றியில் வெள்ளிக் கீற்றுக்களாக நரைத்து விட்டன. முகத்தின் காந்தியில் மெல்லிய திரை விழுந்தாற்போன்ற மூப்பு. ஒடுங்கி ஒசிந்துவிட்ட உடம்பு. காலம் துவைத்த கோலத்தில் உலவி வந்த மனம்.

தங்கையின் இந்தக் கோலம் ஸரஸ்வதி அம்மாளைக் கலங்க அடித்துவிட்டது. சுழிப்பும் கொழிப்புமான நீரோட்டத்தில் இணறுவது போல் துடிப்பு. வேதனையின் புழுக்கத்தில் அவமானத்தின் எரிப்பு.

''சீனியாவுக்கு நாளைக்குப் பிறந்த நாளாம். நம்மை அழைத்திருக்கிருண்டி துளசி.'' அவள் குரலில் அழைப்பை நிராகரிக்கும் அழுத்தம் தொனித்தது.

சட்டென்று திமிறிய மருட்சி, பரிதாப மௌனமாகத் தேங்கியது. தன் மகிழ்ச்சிக்கே நடு நரம்பாய் ஓடும் ஏக்கத்தைப் பற்றித் துளசி இதுகாறும் வெளிப்படையாகப் பேசியதில்லை.

''அக்கா! நீ நாளை சாரங்கன் வீட்டுக்கு —' திருமணத்துக்காகப் போக வேண்டுமே?''

சுருதியின் லயம் மாறியது போல், ''நல்லதாயிற்று. உன் அத்தான் மட்டும் எதிர் வீட்டுக்குப் போய் வரட்டும். தம்பியும் அண்ணனுமாய்...'' என்று சரஸ்வதி தொடருமுன்பாகவே துளசி குறுக்கிட்டு ''ஏனக்கா! இன்று உனக்கு என்ன வந்தது? அத்தான் இஷ்டத்தையே நிராகரிக்க வேண்டுமா? அவர் தடத்தில் கண் மூடிப் போக வேண்டிய நீ, இடையிடையே என்னையே எண்ணித் துன்புறுத்திக் கொள்கிருயே!'' என்று நிதானமாகக் கூறினுள்.

துளசியின் நெஞ்சுக் கமறல் அது. ஆக்கிரம், அழுகை, ஏமாற்றம் எல்லாம் கலவைவிட்ட விரக்தி வெறுமை. மகரந்த மணம் சுகம் பெற்று, திருப்தியுருத சூனியத்தின் கனம். தாபங்களா அவை? இல்லை; தணல் குவியல்!

''ஏண்டி உனக்கு இத்தனை அன்பு அவரிடம்? அவர் என்ன கூறுகிருர், தெரியுமா? என் தம்பி செய்தது தவறுதான் என்றுலும், உன் தங்கை அவனேடு வாழ மறுத்தது பெருந்தவறு. அவன் அழைக்கும்போது அவள் போக வேண்டியவள்தானே என்கிருரடி. இனியும் விரோதம் பாராட்டுவதில் அர்த்தம் இல்லையாம். நாளை அங்கு போகிருராம். என்ன இருந்தாலும் தம்பிதானே கடைசியில்...''

''ஏனக்கா, அத்தான் கூறுவதில் என்ன தவறு? என்மீது உள்ள பாசத்தால் நீ உருகவில்லையா? அதே பாசம் தம்பியின் மீது அத்தானுக்கு இருக்காதா...?''

''உம்'' என்று பெருமூச்சு விட்டாள் சரஸ்வதி. அதற்குமேல் விவாதிக்கவோ, தர்க்கம் செய்யவோ விரும்பவில்லை.

துளசி புத்தக அறைக்குள் நுழைந்துவிட்டாள். உள்ளே ஐக்கியமாகி விட்டால் ஸரஸ்வதியின் விளிப்புக்குத்தான் துளசி எழுந்து வருவாள். அங்கே அவள் படிப்பாளோ, அழுவாளோ அது அவள் உள்ளத்துக்குத்தான் புரியும்.

ஸரஸ்வதி அம்மாள் ஊஞ்சலில் உட்கார்ந்தாள். கொஞ்ச நேரத்திலேயே துளசி திரும்ப வந்து அவள் அருகே நின்றுள். அவளது உடை மாறியிருந்தது. ஆடைகளையோ, முகத்தையோ அலங்கோலமாக வைத்துக் கொண்டு என்றுமே அவள் பிறருக்கு இரக்கப் பொருளாகி நின்றதில்லை.

''என்னம்மா துளசி?''

''நான் கொஞ்சம் வெளியில் போய் வருகிறேன் அக்கா. ஐந்து ரூபாய் பணம் கொடேன்.''

''எடுத்துக் கொள்ளேன், உனக்கு வேண்டியதை.''

துளசியும் தான் போகுமிடம் கூறவில்லை. சரஸ்வதி அம்மாளும் அதைக் கேட்கவில்லை. **(தொடரும்)**

அத்தியாயம் 17

# மேல வீதியில் ஊர்வலம்

# பொன்னிவனத்துப் பூங்குயில்

கொத்தமங்கலம் சுப்பு

**ம**னைவியும், குதிரையும் ஓர் இனம். அடக்கி ஆள முடியாதவனை அதளபாதாளத்தில் தள்ளி விடும் என்பார்கள். பாவாஜிக்கு வாய்த்த பத்தினியும் அந்த வகையைச் சேர்ந்தவள்தான்.

''இவரும்தான் இருக்கிறாரே, எப்பொழுதும் அந்தப்புரத்தையே சுற்றிக் கொண்டு'' என்று பாவாஜியின் முகத்தில் இடித்தான் சுஜனாபாய்.

''வண்டுகள் மலர்களைச் சுற்றுகின்றன. நட்சத்திரங்கள் சந்திரனைச் சுற்றுகின்றன. யுவராஜா, யுவராணியைச் சுற்றுகின்றார். அம்மணி! அது அவர் தவறல்ல. உங்களை இவ்வளவு சௌந்தரியத்தோடு படைத்த பிரம்மனின் தவறு'' என்று பயபக்தியுடன் பகர்ந்து விட்டுப் பலகாரம் வருகிறதா என்று பார்த்தான் ஆமாஜி. சுஜனாபாய்க்கு இந்தப் புகழில் உச்சந்தலை குளிர்ந்தது. நிலைக் கண்ணாடியில் ஒரு முறை பார்த்துக் கொண்டான். ''நான் அவரையே கேட்கிறேன்'' என்று ஒயிலுடன், பாவாஜியின் பக்கம் திரும்பி, 'பதிஜி' என்று ஏதோ பேச ஆரம்பித்தான்.



''மேரே ப்யாரி சுஜனு!'' என்று வெற்றிலைக் காவிப் பற்களை வெளியே காட்டினார் பாவாஜி.

''ப்யாரியும் வேண்டாம். பக்கோடியும் வேண்டாம். உங்களைவிட நாங்கள் நன்றாக ஆட்சி செய்வோமா இல்லையா?'' என்று ஒரு வெடியை வீசி எறிந்தாள் சுஜனு.

''செய்வாய், செய்வாய்!'' — வம்பு வேண்டாம் என்று தலையை ஆட்டினார் பாவாஜி.

''முகஸ்துதி வேண்டாம். சத்தியத்தைச் சொல்லுங்கள். குடிகள் அரசருக்குள் அடக்கம். உங்களையே ஆளுகின்ற நாங்கள் ஏன் உலகத்தை ஆளக் கூடாது? மதுரையிலே மகாராணி மீனாட்சிதேவியார் ஆளுகிறார்களே? நாயக்க நங்கையர் மட்டும் உயர்வா? மராட்டிய மங்கையர்கள் மட்டமா? ஏன் இடித்த புளி மாதிரி உட்கார்ந்திருக்கிறீர்கள்? நீ சொல்லு, ஆமாஜி!'' என்றாள் சுஜனுபாய்.

''எனக்குப் புளியே பிடிக்காது. நான் அதைச் சேர்த்துக் கொள்வதேயில்லை'' என்று அல்வாவை விழுங்கினார் ஆமாஜி.

''இவர் அந்தப்புரத்திலேயே உட்கார்ந்து கொண்டிருந்தால் அரண்மனையில் எதுவும் நடக்கும். எனக்கு இந்தப் பிரதாபன் இங்கு வந்தபோதே சந்தேகம். அந்தப் பாம்பை ஆள் மூலம் அனுப்பியதே பிரதாபன் வேலையாகத்தான் இருக்க வேண்டும்!''

பாவாஜி திடுக்கிட்டார். ''பாம்பைப் பிரதாபன் விட்டிருப்பானு? சே! ஒருகாலும் இருக்காது.''

''பின்னே யார் விடுவார்கள்? ஏய், ஆமாஜி!''

''ஆமாம். எனக்கும் அதுதான் சந்தேகம்....''

''ஆமாஜி, ஏற்கனவே இந்தக் குடும்பத்தில் நாங்கள் இருவரும் ஒற்றுமையாக இருப்பதில் சுஜனுபாய் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறாள்! நீ வேறு 'ஆமாஜி' போட்டுக்கொண்டே இரு.''

''நீங்க கொஞ்சம் மூளையோடு இருக்க வேண்டும். தம்பி என்ற பாசத்துக்காக விட்டு விடக் கூடாது. இந்த நாட்டிலே அண்ணனுக்குப் பின்னாலே தம்பி பட்டத்துக்கு வருவது வழக்கமாக இருக்கிறது.

''ஷாஜி மகாராஜாவுக்குப் பின்னாலே சரபோஜி மகாராஜா வந்தார். அவருக்குப் பின்னாலே உங்கள் தந்தை வந்தார். முன்னோடிய வாய்க்கால் பின்னோடும்'' என்று தன் கணவனை விழித்துப் பார்த்தாள் சுஜனுபாய்.



''ஆமாம், ஆமாம்...!'' என்றார் கணவனும். வேறு வழி!

ஃ ஃ ஃ

''குயிலி, குயிலி, ஊர்வளம் மேள வீதிக்கு வந்துட்டுது, வந்துட்டுது'' என்று கூறிக் கொண்டே தலைதெறிக்க ஓடிவந்தான் முந்திரிக் கொட்டை. இதைக் கேட்ட குயிலியும் சின்னத் தம்பியும் மதில்சுவரின் மேலிருந்து குதித்தனர்.

''ஏய், என்னடா, ஊர்வளமாம். மேளவீதியாம். ஒரு சொல்லவல்லியே'' என்று அவன் தலையிலே தட்டினான் சின்னத்தம்பி.

முந்திரிக் கொட்டை அப்படி சொல்லியதில் குற்றமொன்றுமில்லை. வந்து கொண்டிருந்தது ஊரின் வளம்தான். வீதியும் மேள வீதியேதான்.

தஞ்சை மேல வீதியை மேளவீதி என்றே அழைக்கலாம். அவ் வீதியிலே உள்ள மெத்தை வீடுகளைப்போல் அக்காலத்தில் வேறு எங்கும் காண முடியாது. ஆதலால் அந்த வீதிக்குள்ளே மேளம் வாசித்தால் நன்றாக மேளம் கட்டும். இரிராஜகவி பொன்னையா போன்ற இசை விற்பன்னர்களும் கலைஞர்களும் வசிக்கின்ற தெரு ஆகையால் நாதஸ்வரக்காரர்கள் அன்று நாதமழையையே பொழிந்தார்கள். ''ஞானம் தரும் அன்னி ஆனந்தவல்லி அம்மை, அடிமலர் துதிமனமே'' என்று ஆனந்த பைரவியில் அவர்கள் இசை மழை பொழிந்ததைக் கேட்டு எல்லோரும் ஆனந்தக் களிப்பில் ஆழ்ந்திருந்தனர்.

சிவகெங்கை தோட்டத்தின் வாசலிலிருந்து மூகாலா கச்சேரி வரையிலே வாசலைப் பொடியை அள்ளித் தூவினால் கீழே விழாதபடி கூட்டம் நிறைந்திருந்தது. நம் நாட்டில் அன்றுவரை கண்டிராத, புதிய பொருள்கள் பல அவ்வூர் வலத்திலே வந்தன. ஆகையால் அவற்றைக் காணவே அபரிமிதமான கூட்டம் கூடியது. ராஜகோபால சுவாமி சந்நிதியிலிருந்து மேலவீதி வரை மற்றொரு புறத்தில் மக்கள் நிறைந்திருந்தார்கள்.



# நரைமயிர் கருநிறமடைய ...
# முதுமையிலும்
# இளமையுடன்
# விளங்க...

தூய கேசக்கருமைச் சாதனமாகிய

# வாஸ்மால்

உபயோகியுங்கள்






நரைமயிர் வயதை அதிகரித்துக் காட்டுகிறது...தூய கேசக் கருமை சாதனமாகிய வாஸ்மால் உபயோகித்து நரையின் சுவடே இல்லாதபடி செய்துவிடுங்கள். தினந்தோறும் வாஸ்மால் உபயோகித்து வந்தால் உங்கள் கேசம் மீண்டும் அழகுபட பளபளக்கும் கருநிறத்துடன் திகழும்...நீங்கள் மீண்டும் இளமைத் தோற்றத்தையும், இளமை உணர்ச்சியையும் பெறுவீர்கள்!

**உங்களுக்கு எத்தனை வயதானபோதிலும் வாஸ்மால் உபயோகித்து கேசத்தைக் கருமையாக வைத்துக்கொள்ளுங்கள்!**

ஹெர்லிக் கெமிக்கல் இன்ஸ்டிட்யூட், த. பெ. 1192, பம்பாய்-1

வாஸ்மால் கேசத்தைக் கருமையாக்கும் சாதனம் மட்டுமல்ல, ஒரு உன்னதமான கேசப் பராமரிப்புச் சாதனமுமாகும்... அது உங்கள் கேசத்தை, பளபளப்பூட்டும் கருமணத்துடனும் எடுப்பாகவும் திகழச் செய்கிறது...நாள் முழுவதும் உங்களைக் குளுமையுடனும், புத்துணர்ச்சியுடனும் வைத்திருக்கிறது.

140 மற்றும் 450 கிராம் பாட்டில்களில் வாஸ்மால் எமல்ஸிஃபைட் ஹேர் ஆயில் ரூபத்திலும் ஸ்டாண்டர்டு பேக்கிங்கில் வாஸ்மால் போமேடு ரூபத்திலும் கிடைக்கிறது.

HRI.V.G.I TAP

ஊர்வலத்தின் முதலிலே இரண்டு வெண்கல வண்டிகள் வந்தன. அந்த வண்டிகளின் சக்கரங்கள் வெள்ளியால் ஆக்கப்பட்டிருந்தன. சுமார் மூன்று முழ நீளமுள்ள அக்கினி தேவர்கள் என்ற பெயருடைய இரண்டு வெண்கலப் பீரங்கிகள் அவற்றின் மீது ஏற்றப்பட்டிருந்தன. இவற்றைப் பார்த்து, 'மருந்தால் அழிக்கவும் முடியுமா?' என்று அக்கினி தேவர்களே ஆச்சரியப்பட்டனர். இரு வண்டிகளுக்கும் நடுவே 'எத்தனை பீரங்கிகளை மனிதன் செய்தாலும், என் பேருருவம் அவைகளுக்கு வராது' என்று கூறுவதுபோல் நீண்ட தந்தங்களை உடைய மாபெரும் வேழம் ஒன்று வந்து கொண்டிருந்தது. வேழத்தின் மீது வெள்ளி முரசை வைத்து இருவர் முழங்கிக் கொண்டிருந்தார்கள். முரசுக்குத் தாளம்போல யானையின் மணிகள் முழங்கிக் கொண்டிருந்தன. அதற்கு அடுத்தாற் போல் நான்கு ஒட்டகங்களின் மீது தபேலாக்களையும், ''ஷனாய்''களையும், வைத்துக் கொண்டு எட்டு வித்துவான்கள் கர்நாடக சங்கீதத்தை முழங்கிக் கொண்டிருந்தார்கள். பாலைவனத்தில் உலவுகின்ற ஒட்டகம் மருத நிலத்திற்கு வந்தாலும், காவிரிக் கரும்பை யானைகளுக்கே கொடுத்துவிட்டு வேப்பிலையைத் தின்று வந்தன.

அடுத்த வரிசையிலே அழகான புரவிகளின் மீது நாற்பது வீரர்கள் அமர்ந்து, தங்கள் கைகளிலே ஏதோ ஓர் அரிய பொருளை வைத்துக் கொண்டு வந்தார்கள். அந்தப் பொருள் சோழ நாட்டுக்குப் புதியது. அது என்ன? வெள்ளிக் கவசமிட்ட துப்பாக்கிகள் தான். அவற்றின் மீது கத்திகள் கட்டப்பட்டிருந்தன. இவற்றைப் பார்ப்பதற்காகவே ஏராளமான கூட்டம் கூடவே நடந்து வந்தது. அடுத்த வரிசையில் இரண்டு ஜோடி தஞ்சாவூர் புரவி ஆட்டக்காரர்கள் பொய்க்கால் குதிரை நாட்டியம் ஆடிக் கொண்டே வந்தார்கள். முன்வரிசையில் வந்த உயர்ந்த ஜாதிக் குதிரைகளைப் பார்ப்பதைக் காட்டிலும் பொய்க்கால் குதிரைகளைப் பார்ப்பதற்கு ஏராளமான கூட்டம் நின்று கொண்டிருந்தது. ''நிஜக் குதிரைதான் இருக்கவே இருக்கிறதேடா. பொய்க் குதிரையினுடைய அழகு வருமா?'' என்று அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். உலகமே பொய் என்று தெரியாமலா சொன்னார்கள்!

அடுத்தாற்போல் நான்கு அணிகளாக நாற்பது நடன மாதர்கள் தெருவிலேயே ஆடிக் கொண்டு வந்தார்கள். அவர்களை ஆட்டி வைக்கும் நட்டுவனார்கள் கூடக்கூட ஓடுவதையும், குடுமி அவிழ ஆடுவதையும் பார்த்து மக்கள் குதூகலம் கொண்டார்கள்.

அழகிய ஊர்வலத்துக்கு நடுவே நான்கு புலிகள் வந்து கொண்டிருந்தன. ஆனால் உண்மைப் புலிகள் அல்ல. புலிக் கொடி பறந்த தஞ்சை, புலி வேஷத்துக்குப் பேர்போன ஊரல்லவா? அங்கே புலி வேஷம் தரித்த நான்கு வாலிபர்கள் ஆடிக் கொண்டு வந்தார்கள். வாலைத் தரையில் அடிப்பதும் பாவலாப் போட்டு மேலே பாய்வதும் அவர்கள் வாயைத் திறந்து கர்ஜிப்பதும் கூட்டத்தினரைக் கவர்ந்தது. நிஜப் புலியை அவ்வளவு பக்கத்தில் நின்று பார்க்க முடியாதே என்ற சந்தோஷம் வேறு அவர்களுக்கு. அதனால் புலி வேஷத்தைச் சுற்றி ஏராளமான மக்கள் கொஞ்சம்கூடக் இமையில்லாமல் பார்த்துக் கொண்டு நின்றார்கள். நடன மாதரைக் காட்டிலும் புலி வேஷத்தைச் சுற்றிக் கூட்டம் அதிகம் இருந்தது.

சந்திரன், சூரியன், நந்தி முதலிய சின்னங்கள் பொறிக்கப்பட்ட ஆலவட்டம் சுருட்டிகளை நூல் பிடித்தாற் போல் ஒரே உயரத்தில் பிடித்துக் கொண்டு வந்து கொண்டிருந்தார்கள். அதனிடையே ஒரு பெரிய கருடக் கொடி பறந்தது.

தஞ்சாவூரிலே அக் காலத்தில் ஒருவரும் கிரகணத்துக்கு ஸ்நானம் செய்வதில்லையாம். ஏனெனில், அந்த ஊரிலே மட்டும் கிரகணம் பிடிப்பதில்லையாம்; அதற்குக் காரணம், வானளாவப் பறக்கும் கருடக் கொடியும், தரையில் உள்ள தஞ்சை கருடன் கோட்டையும் தானாம். ராகுவுக்குப் பகையல்லவா கருடன். ஆகையால் வல்லத்திலேயே சந்திரனை விட்டவன் வடவாறு போய்த் தான் மறுபடியும் பிடித்துக் கொள்வானாம்.

முன்சென்ற கொடி ராகுவைத்தான் பயமுறுத்தியது. கிரகங்களுக்கு அதிபதியாக விளங்குகிறவர் சூரிய பகவான். பின்வந்த கொடியோ சூரியனுக்கே அச்சத்தை உண்டாக்கியது. அது அனுமக் கொடி. அந்தக் கொடி வானளாவப் பறப்பதைப் பார்த்தால் ஆதவனைக் கனியென்று நினைத்து மறுபடியும் ஆஞ்சனேயர் பறிக்கப் போகிறாரோ என்று தோன்றியது. இது பரிதிக்கு அச்சத்தை விளைவித்ததால் பரிதி மெல்ல மெல்லத் தன் வெப்பத்தைக் குறைத்துக் கொண்டான். மாலை நேரம் வந்து கொண்டிருந்தது. முன் சென்ற இரண்டு கொடிகளைக் காட்டிலும் உயரமான ஒரு கொடியை ஏற்றிக் கொண்டு நான்கு பேர்கள்

வந்தார்கள். அந்தக் கொடி கருடன் அல்ல. ஆஞ்சனேயரும் அல்ல. அதில் சித்திரமே பொறிக்கப்படவில்லை. அது ஒரு காவி மண் மாசைக் கொடி. மனம் ஆசை மட்டுமல்ல; மானத்தின் மாசைக் காவி அணிந்தவர்களால்தான் துடைக்க முடியும் என்று எடுத்துக்காட்டுவது போல் அது இருந்தது.



போதேந்திர சுவாமியும், நாராயண தீர்த்தரும், மருதாநல்லூர் குருஸ்வாமிகளும், திருவிசைநல்லூர் ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாள் அவர்களும், சதாசிவ பிரம்மேந்திரரும், தருமபுரம், திருவாவடுதுறை குருமகாசன்னிதானங்களும், ஞானச் செங்கோல் நடாத்தும் நாடல்லவா காவிரி நாடு.

இந்தக் கொடிகளுக்கு அடுத்தாற் போல் நீளமாகிய திருச்சின்னங்களை எட்டு வீரர்கள் கையில் வைத்துக் கொண்டு ஒரே சமயத்தில் உயரத் தூக்கி ஊதிக் கொண்டு வந்தார்கள். ''சத்ரபதி மன்னன் வந்தான். சமர கோலாகலன் வந்தான். தஞ்சைபுரியாளும் தாடாளன் வந்தான். வெஞ்சமரில் வீரன் வந்தான். வந்தான், வந்தான்'' என அவை முழுங்கிக் கொண்டேயிருந்தன.

எல்லா வாத்தியங்களும் இருக்கையில் ஒரு வாத்தியத்துக்கு மட்டும் திருச் சின்னம் என்று பெயர் வைத்தார்கள் தமிழ் நாட்டில். உண்மையிலேயே அந்த வாத்தியத்தை ஊதிக் கொண்டு வரும்போது அது திருவின் சின்னமாகவே செவிகளில் பாய்ந்தது. மத்தளம், தடக்கை, தடாரி, முழவு முதலிய வாத்தியங்களைக் கொண்டு கைத் தாளங்களோடு கூட ஒரு கோஷ்டியார் ஒவ்வொரு சந்திப்பிலும் நவசந்தி மேளங்களைச் சுத்தமத்தளத்தில் வாசித்துக் கொண்டு வந்தார்கள். அடுத்து வந்தது அரண்மனை பெரிய அலுவலர்களின் வரிசை. தளவாய், பேஷ்வா, மந்திரி பிரதானி, சர்கேல், வக்கீல் தர்மாதிகாரி, தனுதிகாரி, சம்பிரதி என்று மக்கள் அவர்களைப் பார்த்துப் புதுப் புது வார்த்தைகளைப் பேசிக் கொண்டிருந்தார்கள். சுஜனாபாயின் முக்கிய மந்திரியாகிய ஆமாஜி ஒரு குதிரையின் மீது வந்தார். அப்பொழுதும் அவர் தலை 'ஆமாம்' போட்டு ஆடிக் கொண்டே இருந்தது. அரசருக்கு முன்பு பேஷ்வா ஆனந்தராவ் அவர்களும், தளவாய் வீரய்ய மூப்பனார் அவர்களும் இரண்டு அருமையான புரவிகளில் ஆரோகணித்திருந்தார்கள். அவர்களுடைய குதிரைகளிரண்டும் ஒன்றையொன்று நோக்கி அரசருக்கு முதுகைக் காட்டாமல் பக்கவாட்டிலேயே நடந்து வந்தன.

ஒரு குழந்தை சிராப்பள்ளி கோயிலுக்குச் சென்றிருந்தது. கோயிலுக்குப் போனால் குழந்தைகளுக்கு யானையைப் பார்ப்பதில் ஓர் ஆனந்தம். அந்தக் கோயிலில் யானை இல்லை. குழந்தையின் மனம் குமுறியது. இந்தக் கோயிலுக்கு ஒரு யானை வாங்கிக் கொடுத்து விடவேண்டும் என்று அந்தக் குழந்தை எண்ணியது. மைசூர் மகாராஜாவிடமோ, திருவிதாங்கூர் மன்னரிடமோ அதை யாசகம் செய்வது இறைவனுக்கு இழுக்கு என்று அந்தக் குழந்தைக்குத் தோன்றியது. ஆனால் யானையோ வேண்டும். உடனே குழந்தை பாட ஆரம்பித்தது. குழந்தை கேட்டால் கொடுக்காமல் இருப்பாரா?

''நன்றுடை யானை தீயதில்லானை நரைவெள்ளேறு ஒன்றுடையானை'' என்று பாடிக் கொண்டே வந்து ''சிராப்பள்ளி குன்றுடையானை'' என்று முடித்தது. ஒரு யானையா, இரண்டு யானைகளா? ஆறு யானைகள் எதிரில் வந்து நின்றன. காட்டிலே பிறந்த யானையாக இருந்தால் அது காலனுக்கு இரையாகி விடக் கூடும். இது பாட்டிலே பிறந்த யானை. பைந்தமிழிலே வளர்ந்த யானையாதலால் கார் உள்ளளவும், கடல் நீர் உள்ள அளவும், பக்தர்கள் நாவில் விளங்கிக் கொண்டே வருகின்றது ஞானசம்பந்தர் பாடல். சோழ நாட்டிலே யானைகள் இல்லை. திருவானைக்கா என்ற பெயர் பெற்ற ஸ்தலம் திருச்சிக்கு அருகே இருந்தாலும் கோட்செங்கட் சோழனுக்கு அஞ்சி யானைகளெல்லாம் மலையானத்துக்கும் மைசூருக்கும் ஓடி விட்டன. ஆதலால் யானைகள் அங்கு இருப்பதில்லை. இருந்தாலும் சோழ வளநாட்டின் பொன்னி எத்தனையோ யானைகளை அங்கு கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறான். எத்தனையோ பாடல்களிலும் ஊர்களின் பெயர்களிலும் ஆனைவளம் மிகுந்த நாடு. ஆதலால் துக்கோஜி மன்னர் ஏறி வந்த யானை

பூமிக்கே ஒரு யானையாக விளங்கியது. காவிரிக் கரையிலே கரும்புக்குக் குறையுண்டா? மன்னரின் யானை வெறும் கரும்பு ரசத்தையே பருகி, சர்க்கரைப் பொங்கலாகச் சாப்பிட்டு விட்டு மத மதவென்று இருந்தது. அதன் மீது அஷ்டகஜங்கள் போல அட்டகாசமாக அமர்ந்திருந்தார் துக்கோஜி. ''மன்னருக்கு ஓரானை, மாற்றலர்க்கு ஈரானை, மங்கையர்க்கு மூவானை, மலர்த் தேனின் நாலானை, எவருக்கும் அஞ்சானை, எழில் பொன்னி ஆறானை, இசைகளிலே ஏழானை, இயம்புதற்கு எட்டானை'' என்று பாவில் ஏறி, பல்லக்கில் ஏறி, புலவர் நாவில் ஏறி விளையாடும் நல்ல அரசர் அமர்ந்திருந்தார்.

யானையின் மேலேயே ஒரு வெள்ளியாலாகிய அம்பாரி ஒன்று வைக்கப்பட்டு அதில் பட்டு விதானம் கட்டியிருந்தார்கள். மராட்டிய அரசர்களின் பல்லக்கின் ஓரங்களிலே முத்துச் சரங்களைத் தொங்க விடுவது அவர்களுடைய மரபு. அந்த மரபை ஒட்டி அம்பாரியின் மேல் விதானத்தின் நான்கு கோடியிலும் ஆணி முத்துச் சரங்கள் தொங்கின. பட்டுக் குஞ்சங்கள் அந்த வெண்மைக்கு இடையே புகுந்து வண்ண வேறுபாட்டை உண்டாக்கின. அதன் கீழே அமர்ந்திருந்தார் துக்கோஜி மன்னர். அவருக்கு யார்தான் துக்கோஜி என்று பெயரிட்டார்களோ. ஆனால் அவர் களிப்போஜியாகவே விளங்கினார். போர்க்களத்திலே நின்று பல விழுப்புண்களைத் தாங்கியவருடைய முகத்தில் இத்தனை ஆனந்தம் எங்கிருந்து வந்தது! அது வெற்றித் திருமகளின் வீர நடம்தான்.

மூத்த மகனான யுவராஜா பாவாஜி அரசருக்குப் பின்னால் ஒரு குட்டி யானையின் மீது அமர்ந்து வந்தார். மாவுத்தன் மலையாளத்தில் யானையிடம் பேசும் போதெல்லாம் பாவாஜி இந்தப் பயல் ஏதோ மந்திரம் போடுகிறான் என்று பயந்தார். அந்தக் குட்டி யானை முன் யானைக்குப் பின்னே ஒட்டி ஒட்டிச் சென்றது.

சிங்கமும் யானையும் சேர்ந்திருப்பதே இல்லை. அரியானை என்ற திருப்பாதிரிப் புலியூர்ப் பாடலில், செந்தமிழில் மாத்திரம் சேர்ந்திருக்கச் செய்து புலியுடன் விளையாட விட்டார் திருநாவுக்கரசர். அந்தக் காட்சி பிரதாப சிம்மரைப் பார்த்தபொழுது ஞாபகம் வந்தது. அரி, யானையின் மீது அமர முடியாது என்பதனால்தான் பிரதாப சிம்மர் குதிரையின் மீது வந்தார் போலும்.

வெண்மையான அந்தப் புரவியின் கழுத்திலே தங்கத்தாலான அழகான ஆரம் ஒன்றை அணிவித்திருந்தார்கள். அதன் நெற்றியில் நவரத்தினச் சுட்டி ஒன்று தொங்கியது. அங்கு படிகளிலே ஆடகப் பொன்னை வைத்து இழைத்திருந்தார்கள். பிரதாபசிம்மர் திருவடிகள் இரண்டும் அந்த அங்குபடிகளுக்கு அதிகப்படியான அழகைத் தந்தன. அவர் கையிலே பிடித்திருக்கும் லகானின் லாகவத்திலே அந்தக் குதிரை நாட்டியம் செய்கிறதா, அல்லது அந்த ஊர்ப் பரிகளுக்கே பரதம் ஆடத் தெரியுமா என்ற ஐயம் ஏற்பட்டது. அதன் காலிலே பூட்டிய சதங்கைகள் தாளத்தோடு ''ஜனஜன, ஜனஜன'' என்றன. குளம்பொலிகளோடுகூட அவை சேர்ந்து ஒலிக்கும்போது வளையலை அணிந்த மாதர்கள் திருவிளக்கைச் சுற்றிக் கும்மி யடிப்பதுபோல இருந்தது. கடிய வேகத்தோடு செல்லும் காற்றுக்கு ஏன் கால் என்று பெயர் வந்தது என்று யோசித்தால் இந்தக் குதிரையின் கால் வேகம்தான் காற்றின் வேகமோ என்று தோன்றியது. குதிரைக்குப் 'பரி' என்று பெயர். பரி என்றால் விரைந்து செல்லுவது என்று தமிழிலே பொருள். அது உண்மைதான் என்று புரவி புகன்றது. அதன் எழிலை வர்ணிக்க இயலாது. இசையை எழுத முடியுமா? 'ப''ரி''மா' என்ற மூன்று சுரங்களும்தான் பரிமா வாயிற்றோ? அது புரவியா அல்லது ஆந்தோளிகா ராகமா?

பிரதாப சிம்மர் அதன்மீது அமர்ந்து வரும் அழகைப் பார்க்கும்போது குதிரை வாகனத்திலே கூர் வடிவேலோன் அமர்ந்திருப்பதைப் போலத் தோன்றியது. அவரது அலங்காரத்தில் ஊர்வலமே பொலிவுற்றது. பளபளக்கும் தங்கத் தகடுபோல் பட்டு நிசாரைக் கண்டதுமே அனைவரும் மயங்கினர். இதுவரை ஒருவர் மீதும் வைரமில்லாத அவரது மனம் ''முல்லை வேந்தன்'' மேல் வைரம் கொண்டது போல் வைர கவசம் அணிந்திருந்தார். அம்பறாத் தூணியை முதுகில் கண்டவுடன் வம்பர்கள் வாயடைத்தனர். அவரது தாமரை இதழ் போன்ற விரல்களில் வண்ண மணிக் கணையாழிகள் வண்டுகள் போல மொய்த்தன. முழங்காலில் தங்கக் குமிழ்கள் பதித்த தோற்கவசமும் அணிந்திருந்தார். அவரது இடையில் இருந்த உடைவாள் 'உங்கள் இடையை விட்டு என்னை எடுக்காதீர்கள். எடுத்தால் பதவியை உயர்த்தி முல்லை வேந்தன் மார்பை உறைவிடமாகக் கொடுங்கள்' என்று கேட்டது. (தொடரும்)

# ஏற்றுக் கொள்ளுங்கள் நேருஜி!

"நேரமாகிறது."

குறுக்கும் நெடுக்குமாகப் பார்த்து-கைத்தறி விசை பட்டென்று தெறித்தது. நெய்தல் நின்றது.

துணியை உருவி வெளியே எடுத்தன பிஞ்சு விரல்கள். உயர்த்தித் தூக்கிப் பிடித்துப் பார்த்துப் பூரித்தன முட்டை விழிகள். சுரடுமுரடான காடா துணியைப் போன்ற அமைப்பினால் விரல்கள் சொர சொரத்தன.

"இது நேரு மாமாவுக்கு" என்று எண்ணியதும் பூரித்து நின்றன அந்தச் சிவந்த உதடுகள்.

"நேரமாகிறதுடா!" பேசிக் கொண்டே உள்ளே வந்தான் ராஜா. பெரிய இடத்துப் பிள்ளை என்று அவன் உடம்பின் ஒவ்வோர் அணுவும் பேசின. கடிதத்தைக் காட்டினான். "இங்கிலீஷிலே எழுதியிருக்கேன். தமிழிலே சொல்றேன் கேளு. 'நேரு மாமாவுக்கு, நாகாலாந்து காட்டுவாசிகளை நீங்கள் பார்க்கப் போனபோது அவர்களின் பிரம்புத் தொப்பியும், ஈட்டியுமாக உங்களைப் போட்டோ பிடித்துப் பேப்பரில் போட்டிருந்தது. அதை நானும் என் நண்பன் பேச்சியும் பார்த்தோம். உங்களைத் தமிழ் நாட்டு வேட்டியோடு பார்க்க எங்களுக்குக் கொள்ளை ஆசை. அதற்காக நானும் என் பேச்சியும் சேர்ந்து வேட்டி நெய்து அனுப்பியிருக்கிறோம். இதை உடுத்துக் கொண்டு ஒரு போட்டோ எடுத்து எங்களுக்கு அனுப்பி வைக்கவும். அன்புடன் உங்கள் ராஜா — பேச்சி. போதுமில்லையா?"

பேச்சியின் முகத்தில் திருப்தி.

"சீக்கிரம் வா!" ராஜா வேட்டியை மடித்து எடுத்துக் கிளம்பினான். "எம். எல். ஏ. சார் புறப்பட்டுப் போய் விடுவார். இரண்டு மணி ரயிலிலே மெட்ராஸுக்குப் போகிறார் அவர். ரயிலிலேதான் அவரைப் பிடிக்க முடியும்."

* * *

"எம். எல். ஏ. ஸார்!" மீசைக்காரர் கேட்கிறார். "என்ன உங்களுக்குள்ளேயே சிரிக்கிறீங்க?"

பக்கத்திலிருந்த எம். எல். ஏ.யின் மகன் கல்லூரி மாணவன். டிரான்ஸிஸ்டரைக் காதருகே வைத்துத் திருப்புவதும் ஓரக் கண்ணால் எம். எல். ஏ.யைப் பார்ப்பதுமாக இருக்கிறான்.

"அதில்லே. சில சமயம் பெரியவர்களுக்கும் கூடத் தெரியாத நியாயமான ஆசைகளெல்லாம் குழந்தைகளுக்கு வருகின்றன. அதை நினைத்தேன், சிரிப்பு வந்தது. உதாரணமாக இதைப் பாருங்களேன், இந்த வேட்டியை. எங்களூர்ப் பசங்க ரெண்டு பேர் இதைக் கொண்டு வந்து கொடுத்தாங்க. இதை நேருஜி கட்டிக் கொள்ளணுமாம். ஆசிய ஜோதியைத் தமிழனாக்கிப் பார்க்கணுமாம். எத்தனையோ தரம் அவர் தமிழ் நாட்டுக்கு வந்திருக்கிறார், போயிருக்கிறார். ஆனா இந்த ஆசை நமக்குத் தோன்



# ராஜேந்திரகுமார்




ரியதா?'' என்றவர் வேட்டியை மடக்கிப் பெட்டியில் வைத்து மூடினார். ''மெட்ராசுக்குப்போனதும் ஞாபகமாகக் காமராஜிடம் தரணும். அவர் டில்லிக்குப் போகும்போது எடுத்துப் போவார். உண்மையிலேயே நேருஜி ரொம்பவும் சந்தோஷப்படுவார்.''

அவர் கனவு நீளுகிறது.

வாலிபன் கையிலிருந்த டிரான்ஸிஸ்டர் பாடுகிறது. 'மத் ரோ மாதா லால் தேரே பஹுதேரே'' (அன்னையே! அழாதே உனக்கு எத்தனையோ மக்கள்)

எம். எல். ஏ.யின் முகம் களித்துக் கொள்கிறது. ''டேய்! டிரான்ஸிஸ்டரை மூடு. எந்த அன்னை இப்போது அழுது கொண்டிருக்கிறாளாம். பாட்டுப் போடுகிறான்களாம், பாட்டு!'' என்று முணுமுணுத்தவர் காலை நீட்டிச் சாய்ந்து கொள்கிறார்.

அவருக்குத் தெரியாது. அதே நேரம் இந்திய அன்னை அழுதுகொண்டிருந்தாள், அவள் பெற்ற மாணிக்கம் கண்ணை மூடிக் கொண்டதை அறிந்து.

இரயில் நிற்கிறது. ஜன்னல் வழியாகப் பார்த்த எம். எல். ஏ.யின் முகம் கேள்விக் குறியாகிறது. சூழ்நிலையில்.....

இனம் புரியாத ஒரு பரபரப்பு. கலங்கிய கண்கள்..... வருத்தம் தோய்ந்த முகங்கள். கூடிக் கூடிப் பேசும் சின்னச் சின்னக் கூட்டங்களின் பரபரப்பு.... .

பரபரப்புடன் வந்து கொண்டிருந்த ஸ்டேஷன் மாஸ்டர் செய்தியைப் பரப்பிக் கொண்டிருந்தார்.

அதிர்ச்சியுடன் தலையை உள்ளுக்கு வாங்கிய எம். எல். ஏ. அவசர அவசரமாக மகனின் டிரான்ஸிஸ்டரைப் பிடுங்கி இயக்கினார்.



சோக கீதம். இழைந்து இழைந்து இசையும் வயலின் ஓசை எழுப்பும் சோகம் அவர் சந்தேகத்தை ஊர்ஜிதமாக்கியது.

நெருஜி அமரராகி விட்டார்.

பெட்டியினுள் இருந்த அந்த முரட்டுத் துணி மடிப்பிலிருந்து நிமிர்ந்து விலகி மல்லாந்து சாய்ந்தது.

ஃ ஃ ஃ

"அவ்வளவுதானே!"

திருட்டுப்போன சொத்துக்களின் கணக்கை எடுத்துக் கொண்டிருந்த போலீஸ் இன்ஸ்பெக்டர் கேட்டார்: "வேறு எதுவுமில்லையே?"

யோசித்த எம். எல். ஏ. சொன்னார்: "பெட்டியிலிருந்து ஒரு வேஷ்டி...."

"வேஷ்டியா? என்ன மதிப்பிருக்கும்?"

எம். எல். ஏ.யின் சிரிப்பில் வெறுமை இருந்தது. "அதன் மதிப்பைக் கண்டு பிடிப்பது அவ்வளவு சுலபமில்லே இன்ஸ்பெக்டர். கோடி பெறும். அதற்கு மேலும் பெறும்."

இன்ஸ்பெக்டர் கிளம்பினார்: "புறப்பட வேண்டியதுதான். இதில் ஒரு கையெழுத்தும் போட்டுத் தருகிறீர்களா?"

எம்.எல்.ஏ.யின் பெட்டி திருட்டுப் போய் விட்டது.

கையெழுத்துப் போட்டுத் தந்த எம். எல். ஏ. நெடு நேரம் வரையில் கவலையுடன் அமர்ந்திருந்தார்.

ஃ ஃ ஃ

சென்னையை அடுத்த ஒரு கடற்கரை.

மாலையின் மஞ்சள் வெய்யிலில் நடந்து கொண்டிருந்த அந்த மீனவக் கிழவன் நின்றான். கூர்ந்து கவனித்தான்.

வெண்மணற் பரப்புக்கு அப்பால் வேலி ஓரத்தில் ஒரு பெட்டி தெரிகிறது.

அதை நோக்கி நடக்கிறான்.

நல்ல பெட்டி. திறந்தால் முரட்டு வேட்டி துண்டைத் தவிர வேறு எதுவுமில்லை. யாருடையது இது? ஏன் இங்கே கிடக்கிறது?

தொலைவில் கிளம்பத் தயாராக இருக்கும் படகிலிருந்த அவன் சகாக்கள் கூச்சலிடுகிறார்கள். 'வா வா' என்று அழைக்கிறார்கள்.

பெட்டியைச் சுமந்து நடந்தவனின் தோளைப் பற்றி நிறுத்துகிறார்கள் யாரோ. திரும்பிப் பார்த்த மீனவனின் விழிகள் பிதுங்கின.

போலீஸ்!

ஃ ஃ ஃ

"குற்றவாளி இல்லேன்னு தீர்மானிக்க உன்னே வெளியே அனுப்பச் சொல்லிக் கமிஷனரிடமிருந்து உத்தரவு வந்திருக்கு. இதிலே ஒரு கை நாட்டு வைச்சுட்டு நீ போகலாம்."

மசியில் துவைத்த அவனது இடது கட்டை விரலைப் பாரத்தில் வைத்து அழுத்திய அதிகாரி கேட்டார். "அதுதான் வெளியே விடறாங்களே அப்புறமும் ஏய்யா அழுறே?"

"எம் மேலே பழி வந்துதேன்னு, ஜெயிலிலே என்னை அடிச்சீங்களேன்னு நான அழலீங்க. உண்மையைச் சொன்னால் அதுக்காக நான் நன்றிதாங்க சொல்லணும். அன்னைக்கு மட்டும் நீங்க என்னே வலிச்சுக் கிட்டு வரலேன்னு நானும் அதே தோணியிலே பிழைப்பைப் பார்க்கப் போயிருப்பேனுங்க. அன்னிக்கு விடியப் புயலிலே கடலோட போன அந்தப் பசங்க ஒருத்தன் கூடத் திரும்பி வரலியே. ஐயா இந்தப் போலீஸ் ஸ்டேஷனுக்கு நான் வந்ததாலே இப்ப வீட்டுக்குத் திரும்பிப் போறேன். ஆறு அவங்களோட மட்டும் போயிருந்தால்..."

அவன் மேனி சிலிர்த்தது. "வாரேனுங்க" என்று கைகூப்பிவிட்டு வெளியேறினான்.

தொப்பியைக் கழற்றி வைத்த இன்ஸ்பெக்டர் அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்தார்.

ஃ ஃ ஃ

"ஏதுப்பா இந்த முரட்டுத் துணி?" புதிதாக வந்திருக்கும் இன்ஸ்பெக்டர் கேட்டார். "ஏன் இங்கேயே கிடக்கிறது?"

"பழைய இன்ஸ்பெக்டர் இதை உயிராக வைச்சுக்கிட்டிருந்தார் ஸார்!" ஏட்டு கூறினார். "ஒரு தரம் இந்த வேட்டிதான் அவர் உயிரைக் காப்பாற்றிச்சாம்."

"அப்படியா?"

"ஆமாம் சார்!" ஏட்டின் உடல் சிலிர்க்கது. "ஒரு தரம் ஒரு முரடன் அவரைத் தாக்க வந்தப்ப இந்தத் துணி அவரை உரசி அவர் உயிரைக் காப்பாற்றி விட்டதாம்."

"அதெப்படி?"

"இந்தப் பெட்டியும், துணியும் ஒரு எம். எல். ஏ. யுடையது. ரொம்ப நாளாகவே இந்த ஸ்டேஷனில் கிடந்தது. 'ப்ராப்பர்ட்டி'க்காரர் வருகிற நாளன்றைக்கு இந்தப் பெட்டியை எடுத்து வைத்துக் காத்திருந்தார். ஸ்டேஷனில் யாருமே இல்லே. சென்ட்ரியைக் கூடத் தேநீர் கொண்டுவரச் சொல்லி அனுப்பியிருந்தார். ஏதோ அசந்தர்ப்பம். இந்த வேட்டியை முறுக்கி எடுத்து மேஜையிலே வைக்க அது நெளியறதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார். கொஞ்சமும் எதிர்பாராத விதமாக அந்த முரடன் அவரைப் பின்னாலிருந்து தாக்கிக் கழுத்தை நெரிக்கக் கொல்லப் பார்த்தான். அப்பத்தான் அவர் விலகவே, முறுக்கியிருந்த இந்த வேட்டி நெளிஞ்சு வளைஞ்சு நிமிர்ந்து அவன் கையைத் தாக்கியிருக்கிறது. இருட்டிலே அதைப் பாம்புன்னு நெனைச்சு அந்த முரடன் பயந்து அலறியிருக்கிறான். இவரும் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி அவனே மடக்கி உள்ளே தள்ளிவிட்டார். இதுமட்டும் அன்னைக்கு இல்லையானு அவர் கதையே முடிஞ்சு போயிருக்கும்."

"இது ஏன் இன்னும் இங்கே கிடக்கிறது?"

"எம். எல். ஏ. ஸார் பெட்டியை வாங்கிப் போக வந்தப்போ இது தமக்கு வேணும்னு கெஞ்சிக் கேட்டு வாங்கிக் கொண்டார். மாற்றலாகிப் போகும்போது தான் மறந்து போயிட்டார் போலிருக்கு."

"விசித்திரம்தான்" என்ற அந்தப் புதிய இன்ஸ்பெக்டர் வேட்டியை எடுத்துப்

# நீங்கள் விரும்பும் இசையை
# இனி எளிதில் கேட்டு மகிழலாம்

## புதிய விலைகளில்

## எச் எம் வி
## 'பியஸ்டா' & 'கலிப்ஸோ'



### கலிப்ஸோ

ரிகார்ட் பிளேயர் ரேடியோவுடன் இணைந்து செயல்படுவது

**ரூ. 175.60** வரிகள் தனி

கலிப்ஸோவை உங்கள் ரேடியோவுடன் எளிதில் இணைக்கலாம். எல்லா ரக ரிகார்டுகளையும் போடலாம். 78, 45, 33-1/3 rpm (LP) 16-2/3 rpm ரிகார்டுகூட. ஏ ஸி கரண்ட் மற்றும் பாட்டரி மாடல்கள். எளிமையான தெளிவான இயந்திர அமைப்புடன். எளிதில் எடுத்துச்செல்லக்கூடிய வசதியான பெட்டியில் அடங்கியது.

### பியஸ்டா

ரிகார்ட் பிளேயர்

**ரூ. 292.60**

வரிகள் தனி

தனித்து இயங்கும் 4-ஸ்பீட் கிராமபோன். ஏ ஸி கரண்ட் மற்றும் பாட்டரி மாடல்களில். எல்லா ரிகார்டுகளுக்கும் ஏற்றது. 78, 45, 33-1/3 rpm (LP) 16-2/3 rpm கூட போடலாம். வலிமையான எலிப்டிகல் ஒலிபெருக்கி. தொடக்கவும் நிறுத்தவும் தானே இயங்கும் சுவிட்ச். மிக உறுதியான வேலைப்பாடுமிக்க மரக் காபினெட்.



*வாங்கவும் சிறந்தவை. வழங்கவும் உயர்ந்தவை—HMV பியஸ்டா & கலிப்ஸோ*



## ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்

**நீங்கள் விரும்பும் இசையை உங்கள் வசதிக்குள்ளேயே வழங்கும்**

பார்த்து மேஜை டிராயரின் ஒரு மூலைக்குத் தள்ளி வைத்தார். பிறகு...

ஓராண்டு காலம் கழித்துத்தான் அதை வெளியே எடுத்தார்—ஒரு பார்ஸல் கட்ட...

ஃ ஃ ஃ

**வி**நாடிகள் விரைந்தன. நாட்கள் நகர்ந்தன. மாதங்கள் மாறி ஆண்டும் வந்து போயிற்று.

எல்லையிலே ஊடுருவல். பகைவர்களின் நடமாட்டம். பிரதமர் லால்பகாதுர் சாஸ்திரியின் எச்சரிக்கைக்கும், கண்டனத்துக்கும் செவி மடுக்காத தீயோரின் சதிச் செயல்களின் விளைவு.

முழு அளவு யுத்தம் அறிவிக்கப்பட்டது. இந்திய வீரர்களின் வீரத்துக்கு ஒரு சந்தர்ப்பம். சமாதானத் தூதுவர்களின் போர்க் கோலம். இந்தியன் என்றால் இன்னவன் என்று பகை நாட்டுக்கு உணர்த்திக்கொண்டிருந்த போர் வீரர்களுக்கு ஊக்கமளிக்க நாட்டு மக்களின் அன்புக் காணிக்கைகள் எல்லையை நோக்கி விரைந்து கொண்டிருந்தன.

'தென்னகரம் போலீஸ் நண்பர்களின் அன்பளிப்பு' என்ற பெயர்ச் சீட்டு ஒட்டிய அந்த வேட்டி பிரிக்கப்பட்டது. உள்ளே இருந்த கம்பளங்களை எடுத்துக் கொண்ட அந்த அதிகாரி வேட்டியைப் பலகணி வழியாக வீசி எறிந்தார்.

அது காற்றிலே பறந்து தவழ்ந்து நெகிழ்ந்து சென்று ரயில் பாதையின் குறுக்கே விழுந்தது. அது விழுந்த இடத்தில் சின்னச் சின்னச் செடிகள் இருக்கவே சற்றே உப்பலாகப் படர்ந்து நின்றது.

ஃ ஃ ஃ

**மௌன**த் ஆர்களின் இசை கேட்கிறது. கூடவே சிரிப்பின் கொம்மாளமும் கேட்கிறது. ரயில் வந்து கொண்டிருக்கிறது.

எஞ்சினில் கனன்று கொண்டிருந்த நெருப்பில் கரியை அள்ளி அள்ளிக் கொட்டிக் கொண்டிருந்த பையன் சிரித்தான். "எவ்வளவு நெருப்பு இருந்து என்ன பிரயோசனம் ஸாரு? சிகரெட் பற்றவைக்கத் தீக்குச்சி யில்லையே."

நல்லதாய்ப் போயிற்று" — டிரைவர் சிரித்தார். "உன் நாற்றம் பிடித்த சிகரெட்டிலிருந்து நான் பிழைத்தேன்."

கடகடவென்ற ஓசையுடன் ரயில் ஓடிக் கொண்டிருந்தது. சிரிப்பும் கூச்சலும் கேட்டவண்ணம் இருந்தன.

"பதான் கோட் போகும்வரை எங்குமே நிறுத்தத் தேவையில்லை" என்ற டிரைவர் எக்கி, பின்தொடர்ந்து வரும் வண்டித் தொடரைப் பார்த்தார். ஜன்னல் வழியாகத் தெரிந்த நிழல்கள்... உரத்து உரக்குக் கேட்கும் சிரிப்பொலி. ஏனோ அவர் நெஞ்சைப் பிழிந்தது.

பின் தொடர்ந்து வந்து கொண்டிருந்த வண்டிகளில் பாட்டும் கூத்தும், சிரிப்பும் பேச்சுமாகக் கலகலப்பு களை கட்டி நின்றது. ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்த ஒருசில வீரர்கள் இவரைப் பார்த்துக் கையசைத்தார்கள். 'இவர்களில் எத்தனை பேர் திரும்பி வருவார்களோ?' என்ற எண்ணம் நெஞ்சைப் பிசையத் தாமும் கையாட்டிவிட்டு முகத்தைத் திருப்பிக் கொண்டார் டிரைவர்.

இருளைக் கிழித்துக் கொண்டு ரயில் முன்னேறியது. முன் விளக்குப் பாய்ச்சும் ஒளி சாலையின் நீண்ட தொலைவைச் சுட்டிக் காட்டிக் கொண்டிருந்தது. கம்பியைப் பற்றிக் கொண்டு பார்த்தவாறிருந்த டிரைவரின் கண்ணில் பட்டது அது. சட்டென்று நிமிர்ந்து கூர்ந்து கவனித்தார்.

ரயில் பாதையின் குறுக்கே யாரோ படுத்திருப்பது போன்று தெரிந்தது. தற்கொலையா? கை கயிற்றைப் பிடித்து இழுக்கவே பேயாய் அலறிற்று எஞ்சின்.

அந்த ஆளிடமிருந்து எந்த மாற்றமும் தெரியவில்லை.

"மாஸ்டர்!" பையன் அலறினான். "ஆள் மாஸ்டர். துண்டு துண்டாப் போயிடுவான். பிரேக்கைப் போடுங்க மாஸ்டர்."

பொறுப்புடன் ராணுவத்தை ஏற்றிச் செல்லும் வண்டி அது. அகாரணமாகக் கண்ட இடங்களில் நிறுத்தக் கூடாது.



# போஸ்டல் டியூஷனுக்கு ஹாஸ்டல் உண்டா?

**சாமா**



நடக்கும் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை இங்கிலீஷ் கேள்வித் தாளில் மாதிரிக் கடிதம் ஒன்று எழுதும்படி கேட்டிருந்தது.



'கமர்ஷியல் கரெஸ்பான்டென்ஸ் கோர்ஸ்' நடத்தும் பள்ளியில் நீ சேர விரும்பினால் எப்படிக் கடிதம் எழுதுவாய் என்று கேட்டிருந்தார்கள். ஒரு மாணவன் அதற்கு எழுதி இருந்தது, பேப்பர் திருத்துபவரை அவுட்டுச் சிரிப்புக்கு ஆளாக்கும்.



பையன் எழுதிய கடைசி வரியைப் பாருங்கள்:



'நான் நிச்சயம் சேருகிறேன். ஹாஸ்டல் சௌகர்யங்கள் எப்படி? அதற்கு நாங்கள் கொடுக்க வேண்டிய வாடகை எவ்வளவு?' என்று எழுதியிருந்தான்.

"அடாடா! நீ ரொம்ப நல்லா எழுதியிருக்கிறாயே; அதை நான் எழுத மறந்து விட்டேனே!" என்றான் இன்னொரு மாணவன், அவனிடம்!

பொறுப்பு தடுத்தாலும் கூட, 'கண்ணுக்கு முன்னால் ஒருவனைப் பலி கொடுக்கக் கூடாது' என்ற மனிதத் தன்மைக்கே வெற்றி கிட்டியது.

பாய்ந்து சென்று முழு பலத்துடன் பிரேக்கைப் பிடித்துத் திருப்பினார். வேகமாக வந்து கொண்டிருந்த வண்டியாதலால், பிரேக் பிடிப்பது அவ்வளவு சுலபமாக இருக்கவில்லை. இஞ்சின் தண்டவாளத்தில் தீப்பொறியைப் பறக்கவிட்டு, தேய்ந்து அழுத்திப் பின்நின்றது.

''என்ன? என்னவாயிற்று?''

பட்டாளத்து வீரர்களில் சிலர் எட்டிப் பார்த்தார்கள். சிலர் கீழே குதித்து எஞ்சினை நோக்கி ஓடினார்கள். சூழ்ந்து வந்த காக்கி உடைகளுக்குப் பின்னால் வெண்ணிற ஆடையுடன் ஓடி வந்து கொண்டிருந்த கார்டின் உருவம் பளிச்சென்று தெரிந்தது.

சின்னஞ் சிறு செடிகளின்மீது படர்ந்து காற்றில் படபடத்துக் கொண்டிருந்த அந்த வேட்டியை எடுத்துப் பார்த்த டிரைவரின் முகத்தில் முதலில் ஏமாற்றமும், பின்னர் பீதியும் நிரம்பின.

ஓட்டி வந்தது சாதாரணப் பிரயாணிகளின் வண்டியாயிருந்தால் பரவாயில்லை. ரகசியமாக வந்து கொண்டிருந்த தனி ரயில் அது. அதுவும் பொறுப்புள்ள பட்டாளத்து வீரர்களை, யுத்த கால அவசியத் தேவைகளைச் சுமந்து செல்லும் ரயில் ஆயிற்றே.

''கொஞ்சம் கூடப் பொறுப்பில்லாமல் நடந்து கொண்டு விட்டாயே!''

எல்லோர் கண்களிலுமிருந்த அந்தக் கேள்வியைக் கார்டு கேட்டே விட்டார்.

மேஜர் ஒருவரும், ஹவில்தார் ஒருவரும் ரிப்போர்ட் அனுப்பப் போவதாக மிரட்டினார்கள். பிறகு சலிப்புடன் ரயிலுக்குத் திரும்பினார்கள்.

''ஒருவேளை ரயிலை டடக்க யாராவது விஷமிகள் செய்த வேலையாயிருக்குமோ?'' என்று ஒருவன் கேட்க, அத்தனை பேர் கண்களும் சுற்றிலும் துழாவியவாறு நடந்தன.

அகஸ்மாத்தாக ரயில் பாதையில் கண்ணைச் செலுத்திய ஒரு வீரனின் கண்கள் இடுங்கின. பிறகு பயங்கரமாகப் பிதுங்கின.

அடுத்த விநாடி அவர் போட்ட கூச்சல் அனைவரையும் திரும்ப அழைத்து வந்தது.

க் க் க்

''போட்டியின்றி இந்தியாவின் பிரதமராகத் திருமதி இந்திரா காந்தி தேர்ந்தெடுக்கப்பட்டார்.'' டிரான்ஸிஸ்டர் மாலைச் செய்தியை ஒலிபரப்பிக் கொண்டிருந்தது.

தாஷ்கண்ட் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டுவிட்டுக் கடமை நிறைவேறிய நிம்மதியுடன் சாஸ்திரிஜி கண்ணை மூடிவிட்டார். போர் ஓய்ந்து விட்டது. போர்வீரர்கள் எல்லையை விட்டு ஊர் திரும்பிக் கொண்டிருந்தார்கள்.

''நான் புறப்படட்டுமா?'' டிரான்ஸிஸ்டரை எடுத்துக் கொண்ட தமிழ் வீரன் கைப்பினன்.

''இதை மறந்து விட்டாயே'' என்ற அந்தப் பஞ்சாபி நண்பன் எடுத்துத் தந்த முரட்டு வேட்டியை எடுத்துக் கொண்டான்.

''வேட்டி! தமிழ் நாட்டு ஆடை!'' தமிழ் வீரன் பூரித்தான். ''இது எத்தனை பேர் உயிரைக் காப்பாற்றியிருக்கிறது தெரியுமா? இதுமட்டும் அன்று ரயிலை நிறுத்தியிருக்காவிட்டால் தண்டவாளத்திலிருந்த கண்ணிவெடி வெடித்து அத்தனை பேரும் கூண்டோடு போய்ச் சேர்ந்திருப்போம். யாரோ விஷமிகள் செய்த வேலை. நல்ல வேளை! இது காப்பாற்றியது. இதைப் பார்த்து யாரோ கிடக்கிறார்கள் என்று நினைத்து டிரைவர் ரயிலை நிறுத்தியிருக்காவிட்டால் கொஞ்ச தூரத்தில் பெரிய விபத்தே நேர்ந்திருக்கும். இதை நான் பிரியத்தோடு எடுத்துக் கொண்ட போது எத்தனை பேர் என்னைத் தமிழன் என்கிற முறையில் கைகுலுக்கிப் பாராட்டினார்கள் தெரியுமா?''

''சரி. நேரே எங்கே? உன் கிராமத்துக்குத்தானே போகிறாய்?''

''இல்லை.'' தமிழன் சொன்னான். ''வெற்றியோடும் உயிரோடும் நான் திரும்பி வந்தால் முதலில் ரிஷிகேசத்துக்குப் போய்ச் சாமி கும்பிட்ட பிறகுதான் ஊருக்கு வர வேண்டுமாம். அம்மாவின் பிரார்த்தனை இது. செலுத்தியாக வேண்டும்.''

''நல்லது. போய் வா.''

ஜீப் வரை நடந்து வந்த அந்தப் பஞ்சாபி நண்பனிடம் கைகுலுக்கி விடைபெற்றான் அந்த இளம் தமிழன்.

பனி...கடும் குளிர்...

நடந்து கொண்டிருந்த யாத்திரிகர்களில் ஒருவனாக வந்து கொண்டிருந்த அந்த வாலிபன் முன்னால் தள்ளாடி நடக்கும் குஜராத்திப் பெரியவரைப் பார்த்துக் குஜராத்தியில் கேட்டான்: ''என்ன இது? உங்களுக்கு நான் போர்த்திவிட்ட அந்த வேட்டி எங்கே? எங்காவது வழி தவறி விட்டு விட்டீர்களா?''

நடுங்கும் குரலில் சொன்னார் அந்தக் கிழவர். ''நேற்று மாலை கங்கையில் குளித்தோம் இல்லையா? அப்போது அது வெள்ளத்தோடு போய்விட்டது, மகனே!''

சலிப்புடன் நடந்தான் அந்தத் தமிழ் வீரன்.

க் க் க்

கங்கையின் பிரவாகம்... அந்த வேட்டி புரண்டும் மிதந்தும் கங்கையோடு ஓடிப் பல நாட்கள் பயணம் செய்து திரிவேணி சங்கமத்துக்கு வந்ததும் நீரில் அமிழத் தொடங்கியது.

அந்த இடத்தில் நேருஜி கரைந்திருக்கிறார். அவருக்கென்று அன்புடன் அனுப்பப்பட்ட அந்த அழுக்கு வேட்டியை அவர் ஏற்றுக் கொள்வாரா?

'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடும்.' பிறருக்குத் தொண்டு செய்யவே பிறந்த பெருந்தகை அல்லவா அவர்! பல உயிர்களைக் காத்துத் தம்மிடம் வந்த அந்த வேட்டியை அழுக்கென்று தள்ளி விடுவாரா? இல்லை... இல்லவேயில்லை.

நிச்சயம் ஏற்றுக் கொள்ளுவார்.



# உத்தரவாதம் உள்ளது

- குளிர்ச்சியான காற்றை அளிக்க மிகுந்த சக்தி
- முற்றிலும் ஓசையில்லாத இயக்கம்
- பொறியியல் நுட்பத்தினால் கோளாறற்ற இயக்கம்
- எப்படிக் கோணலாக வைத்தாலும் பக்கத்துக்குப் பக்கம் சுலபமாக ஆடிச் சுழலும் தன்மை
- இயக்கத்தை இஷ்டம்போல் கட்டுப் படுத்த நம்பக மான கண்ட்ரோல்கள். இவை சோதனை செய்து பொருத்தப் பட்டவை மற்றும் மித்தானே அமுக்கி இயக்கக் கூடியவை

ராலிஃபேன்களைப் பற்றிய விவரங்கடங்கிய வண்ண வெளியீட்டை இலவசமாகப் பெற கீழ்க் காணும் கூபனை பூர்த்தி செய்து இந்த விலாசத்திற்கு அனுப்பவும்:

ராலிஸ் இந்தியா லிமிடெட், 21, ரேவலின் ஸ்ட்ரீட், பம்பாய்-1

பெயர்............................................................

விலாசம்..........................................................

..................................................................

K.K.M.

உங்கள் அறைக்கு அணியாகத் திகழ அழகே உருவான ஃபேன் ராலிஃபேன்! இதன் கம்பி வலை, நேர்த்தியான நூதன டிசைனில் செய்யப்பட்டது. ராலிஃபேன் நான்கு கண்கவரும் வண்ணங்களில் கிடைக்கிறது: பழுப்புச் சாம்பல், நீலம், பச்சை மற்றும் தந்தம். எடுத்துச் செல்ல வசதியாக இருப்பதற்காக இதற்கு பிரத்தியேக டிசைனில் செய்யப்பட்ட கைப்பிடி உள்ளது. இன்றே எந்த ராலிஃபேன் டீலரையாவது இந்த ஒப்பற்ற மின் விசிறியை இயக்கிக் காட்டச் சொல்லுங்கள்!

தென்றலின் குளுமையூட்டுவது

## ராலி:பேன்

ராலி குரூப்பின் தயாரிப்பு

மறவாதீர்கள்! ஒவ்வொரு ராலி ஃபேனுக்கும் 2 வருட உத்தரவாதம் அளிக்கப்படுகிறது

ராலிஃபேன் வகைகளில் உட்படுபவை: சீலிங் ஃபேன், பெடெஸ்டல் ஃபேன், வால் ஃபேன், எக்ஸாஸ்ட் ஃபேன்



# அந்தக் கரை

## கா.ப.ரா

கோபாலரத்தினத்தின் வீட்டுக் கதவைத் தட்டினபோதுதான், அவர் ஊரில் இல்லை என்ற நினைவு வந்தது, சேஷாத்திரிக்கு. தம்முடைய அருமை நண்பர் கோபாலரத்தினம் போன வாரம்தான் சென்னைக்குப் போனார் என்பது சேஷாத்திரிக்குத் தெரியாத உண்மையல்ல. உள்ளத்தில் மண்டிக் கிடக்கும் கவலைகளில் அதை மறந்து விட்டாரோ? கோபாலரத்தினத்திடம் தம்முடைய கவலைகளையும் வருத்தங்களையும் பற்றிப் பேசும் போது எவ்வளவு நிம்மதியான உணர்வு! கோபாலரத்தினம், தம் இளைய மகனுடன் சண்டையிட்டுக் கொண்டு, பெரிய பிள்ளையிடம் போய்விட்டார். சேஷாத்திரிக்கும் அதுபோல வழி இல்லையா என்ன?

அந்த இரண்டு பேரும் முதியவர்கள். வாழ்க்கை அனுபவம், வயது, பிரச்னைகள், கவலைகள் எல்லாமே இருவருக்கும் பொதுதான். இருவரும் பென்ஷன் வாங்குபவர்கள். அதனால் வீட்டில் அதிகாரம் செலுத்தும் நிலை கடந்தவர்கள். பென்ஷனைப் பெற்றதும் தத்தம் பிள்ளைகளிடம் ஒப்படைத்துவிட்டுச் செலவுக்கு அவர்களை எதிர்பார்க்கின்றனர்கள். தம் உரிமைப்படியே வாழ்ந்து பழக்கப்பட்ட அவர்களுக்கு, இப்போது சற்று அதிகாரம் அடங்கிய நிலை — ஏன் வெறும் பெயரளவில் இருந்த அதிகாரம் சற்றும் பிடிக்கவில்லை. இதனால் எத்தனையோ முரண்பாடுகள்; மன வருத்தங்கள். தினமும் நாகநதி ஊற்றில் குளித்துத் தென்னந்தோப்புக் காற்றை அனுபவிக்கத்தான் அந்தக் கிராமத்தில் இருந்தார்களே அன்றி வேறு கதி இல்லாமல் இல்லை. கோபாலரத்தினத்தின் மூத்த மகன் சென்னையில் வசதியாக வாழ்கின்றவன். இளையவனுக்கு ஊர் மணியம். சேஷாத்திரிக்கு இன்னும் வசதி உண்டு. அவருடைய இரண்டாவது மகன் சங்கரனும் குறிப்பிடத்தக்க புள்ளிதான். பண வசதி குறைவாக இருந்தாலும், பரம்பரைச் சொத்து ஏழெட்டு ஏக்கர் இருப்பதால் ஊரில் ஓரளவு மதிப்பு உண்டு. மற்ற பிள்ளைகள், ஆளுக்கோர் ஊரில், பெரியவன் பிலாயிலும், மற்ற இரண்டு பேரும் கோவையிலும் மதுரையிலுமாக வாழ்கின்றனர் வளமாக. எனவே கோபாலரத்தினத்துக்கு உள்ள போக்கிடத்தை விடச் சேஷாத்திரிக்கு வாய்ப்பு அதிகம்.

சங்கரனுக்கும் அவருக்கும் கொஞ்ச நாட்களாக ஒத்து வரவில்லை. சங்கரனுக்கு நாற்பது வயது. முன்னைப் போலவே இப்போதும் அப்பாவைக் கேட்டுத்தான் எல்லாமே செய்ய வேண்டும் என்ற நிலை தளர்ந்தது. அவன் அவ்வப்போது ஆகவேண்டிய காரியங்களை முன்கூட்டியே திட்டமிட்டுச் செய்பவன். அனாவசியச் செலவுகளைச் சமாளித்தே பழக்கம். சேஷாத்திரியின் பென்ஷன் தொகையைக் கொண்டு உடனடியாகச் செலவு ஒன்றை எதிர்நோக்க எண்ணியிருந்தால், அவர் தம் மகளுக்காக ஏதாவது சாமான்கள் வாங்கலாம் என்று முடிவு செய்திருப்பார். பக்கத்து ஊரில் நிலத்தை யாருக்குக் குத்தகை விடுவது என்பதில் தகராறு: அறுவடையான நெல்லை உடனே விற்கலாமா, வேண்டாமா என்பதில் முரண்பாடு. சங்கரனுடைய தாய், ஊரில் உள்ளபோது தகராறுகள் குறையும். கணவனிடம் கண்டிப்பாக அவள் சொல்லி விடுவாள். "சங்கரனுக்கும் பொறுப்பு உண்டு. இனிமே நமக்கெதுக்கு வீண் தொல்லைகள், போகிற வழிக்குப் புண்ணியம் தேட ஏதாவது படிங்க... எல்லாம் அவன் விருப்பமா விட்டு விட்டு நிம்மதியா இருங்க" என்பாள். அவள் பெரிய பிள்ளை வீட்டுக்குப் போயிருக்கிறாள். போன நாள் முதலே தகப்பனுக்கும் பிள்ளைக்கும் புகைச்சல் மீண்டும் தொடங்கியது. மருமகள், பேரப்பிள்ளைகளைப் பொறுத்தவரை தொல்லையில்லை. பிள்ளையுடன் கொண்ட மாறுபாடு தான் அவரை உறுத்துவது.

மற்றப் பிள்ளைகள் இப்படி இல்லை.

மற்றப் பிள்ளைகள்! ஆகா! அவர்களைப் பற்றி எண்ணும்போது அவர் இதயம் துள்ளும். எவ்வளவு அன்பானவர்கள் அவர்கள்! ஆண்டுதோறும், அல்லது இரண்டாண்டுக்கு ஒருமுறை விடுமுறைக்கு அவர்கள் கிராமத்துக்கு வருவார்கள். சேஷாத்திரிக்குப் பிடித்தமான வேட்டிகள், புத்தகங்கள், பழங்கள் வாங்கி வருவார்கள். அப்பாவுடன் உட்கார்ந்து, அரசியல், பொருளாதாரம், ஆபீஸில் நடந்த விநோதங்கள் என்று சதா அரட்டை அடிப்பார்கள்.

சங்கரன் அவரோடு பரிவாகப் பேசி எத்தனையோ மாதங்கள் ஆகிவிட்டன. என்னதான் பேரப் பிள்ளைகளும், மற்றவர்களும்

பாரிஸ் நகரில் உள்ள ஐஃபல் கோபுரம் சாதாரண நாட்களை விட வெய்யில் நாட்களில் ஆறு அங்குலம் கூடுதலான உயரம் இருக்குமாம்.

'இங்கிலீஷ் டைஜஸ்ட்' - பாபு

அவரிடம் அன்பாகப் பழகினாலும் சங்கரன் அன்பு காட்டாத இடத்தில் இருக்க வேண்டுமா? முன்னமே போயிருக்கலாம். ஆனால் காலையில் குளிக்க நாகநதி ஊற்றும், மாலையில் ஆற்றுப் படிக்கட்டில் அமர்ந்து, தென்னந்தோப்புத் தென்றல் காற்றை நுகரும் இன்பமும் அவரை எங்கும் போகவொட்டாமல் தடுத்தன. இனி அவற்றுக்கு அவரைத் தடுக்கும் வலிமை இல்லை. கோபாலரத்தினத்தையே தடுத்து நிறுத்தவில்லையே, தம்மையா தடுக்க முடியும்?

பிலாய் போக வேண்டியதுதான். பெரிய பிள்ளை தகப்பனிடம் மிகவும் பணிவானவன். அன்பானவன். அங்கே போனாலும் அவருக்கு 'ஜாம் ஜாம்' என்று உபசாரம் நடக்கும். பென்ஷன் தொகை அவருக்குத்தான். தினமும் சண்டை இல்லை; தகராறு இல்லை.

## (2)

பிலாய் போக ஏற்பாடுகள் முடிந்துவிட்டன. சங்கரனிடம் சொல்ல வேண்டியது தான் பாக்கி. அவன் தடை சொல்லப் போவதில்லை. கொஞ்ச காலம் அவர் பிரிந்திருந்தால், சங்கரனுக்கும் தகப்பனின் மதிப்புத் தெரியும் என அவர் எண்ணினார்.

வேலூருக்குச் சென்று, பிலாய் பயணம் செய்ய டிக்கட்டு வாங்கிவிட வேண்டும். பத்து நாட்களுக்கு முன்பாகவே டிக்கட் ரிசர்வ் செய்தால்தானே இடம் கிடைக்கும்? வேலூருக்குப் புறப்பட்டார். பஸ் ஏற இரண்டு மைல் நடந்தாக வேண்டும். வெய்யில் கொளுத்த ஆரம்பித்து விட்டது. எதிர் வெய்யில். ஒரு மைல் நடப்பதற்குள் சலிப்பும் களைப்பும் அவரை வாட்டின. சாலையோரம் நிழல் விரிக்கும் புங்க மரத்தின் அடியில் அமர்ந்தார். மரத்தின் அடி, சாய்ந்து கொள்ள வசதியாக இருந்தது. சாய்ந்து கொண்டார். மெல்ல மெல்ல உறக்கம் அவரை ஆட்கொண்டது. பிலாய்க்குப் போவது போல் கனவு அவரை மகிழ்வித்தது.

''ஓய் சேஷு! சேஷு!'' — யார் நம்மை அழைப்பது?

கனவு கலைய, அதனுடன் உறக்கம் கலைய, விழித்தார் சேஷாத்திரி. எதிரில் நின்றவர் அவர் நண்பர்.

கோபாலரத்தினம்.

''ஆனந்தமாகத் தூக்கமா? வீடு வாசல் இருக்கையில் எங்கேயோ மரத்தடியிலே என்னய்யா தூக்கம்?'' என்றபடி கோபாலரத்தினம் தம் கையிலிருந்த பைகளைக் கீழே வைத்தார்.

''எப்ப வந்தே?''

''இப்பத்தான் வரேன்!''

''வரமாட்டேன்னு நினைச்சேன்! பட்டணம் போய் இருபது நாள் ஆகலே! அதற்குள்ளே.....?'' என்றார் சேஷாத்திரி.

''இருபது நாட்கள் அங்கே இருந்ததே பெரிசு!''

''என்ன அவ்வளவு சலிப்பு?''

''அக்கரைக்கு இக்கரை பச்சை! இக்கரைக்கு அக்கரை பச்சை சேஷு! பட்டணத்துப் பையன் நம்மகிட்டே ரொம்பப் பாசமா இருக்கானேன்னு பார்த்துப் போனேன். சின்னவனே மேல்! எல்லாம் என் தப்பு!'' என்று நொந்து கொண்டார் கோபாலரத்தினம்.

''நீ என்னய்யா தப்புச் செய்தே?''

''பெரியவன் ரொம்ப அன்பா இருக்கானேன்னு நெனச்சேன்! அது தப்புத்தானே! பெரியவன் எப்பவோ ஊருக்கு வரான். ரெண்டு மூணு நாள் இருக்கான். ரொம்ப ரொம்பப் பாசம் காட்டறான். கொஞ்சறான். சின்னவன் கூட என்னிக்கும் இருக்கோம். அதனாலே அறுபது நாளும் அன்பாக இருக்க முடியுமா? உண்மையிலே, எனக்குத் தலை வலி, கால் வலின்னு சின்னவன் கவனிச்ச மாதிரி பெரியவன் கவனிக்கல்லே. இதோ பாரு சேஷு! நெருங்கி யிருக்கிறவங்க, நெருங்கியிருக்க வேண்டும் என்ற எண்ணத்தால்தான் இந்த உரிமைகளை—அடிக்கடி தகராறு செய்யற உரிமைகளைக் கொண்டிருக்காங்க. நெருக்கம் இல்லாதபோது என்னை வைய என்ன உரிமை இருக்கு? பெரியவன் ஊருக்கு வரான். உண்மையிலே எனக்கும் அவனுக்கும் நெருக்கம் இல்லே. அதனாலே ரொம்பவும் அன்பா நடக்கறான். ஊரிலே தங்கற ரெண்டு மூணு நாளுல! நெருங்கினாலோ அன்பு குறையுது. பட்டணம் போனேனே! இருபது நாட்களில் முதல் ரெண்டு மூணுநாள் ஒண்ணும் தொந்தரவு இல்லே. பிற்பாடு எனக்கென்னவோ ஒரு மாதிரியான உணர்ச்சி என்னடா, நாம என்ன எதிர்பார்த்தோம்! என்ன நடக்குது! தினமும் பேசுவான், அரட்டை அடிப்பான்னு பார்த்தோமே! மாறு. அங்கே படுக்காதீங்க, இங்கே உட்காராதீங்கன்னு சொல்றானேன்னு பார்த்தேன். இதோ பாரய்யா! அந்தப் பிள்ளை நல்லவன், இந்தப் பிள்ளை நல்லவன்னு எண்ணுறது வெறும் மாயை! நெருங்கினா அன்பு குறையுது... பேசாமல் ஊருக்கே போயிடலாம்னு வந்துட்டேன். என்ன சொல்றே நீ?'' என்று சேஷாத்திரியைக் கோபாலரத்தினம் உலுக்கினார்.

''உண்மைதான் கோபால்! நம்மகிட்ட அன்பா இருப்பாங்க என்று கனாக் கண்டு, அவங்க கிட்டப் போய் அந்தக் கனா ஏமாற்றமா போறதுக்குப் பதிலா, இங்கேயே இருந்துண்டு அவங்க அன்பானவங்க என்று போகாமல் கனா காணலாம். ஆசை நிராசையாகப் போகாது...'' என்று எழுந்தார், சேஷாத்திரி.

வெய்யில் கொளுத்துகிறது. ஊருக்குப் போக ஒரு மைல் நடக்க வேண்டும். இருவர்களானாலும் அவர்கள் சுறுசுறுப்பாக நடந்தார்கள்.

# ∴பாஸ்∴போமின் 

# சக்தியை அதிகரிக்கிறது.

# பசியைத் தூண்டுகிறது.



# வலிவைப் பெருக்குகிறது.



# நோய்களை எதிர்க்கும் சக்தியை கூட்டுகிறது.

**சுருங்கச் சொன்னால்—
குடும்பத்தில் அனைவரும் திட
ஆரோக்கியத்துடன் திகழ
உதவுகிறது ∴பாஸ்∴போமின்**




∴பாஸ்∴போமின்... 'பி' காம்ப்ளெக்ஸ் வைட்டமின்களும்,
பலவகை கிளிஸரோ∴பாஸ்பேட்டுகளும் அடங்கிய.
பழரஸ மணம் கமழும் பச்சைநிற டானிக்.

SQUIBB® TTT® ® இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்பொரேடேட்டின் ரிஜிஸ்டர்ட் டிரேட் மார்க்காகும்.
கரம்சந்த் ப்ரேம்சந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

SARABHAI CHEMICALS — Shilpi SC 50 A /67 Tam

# அன்னையைப் போற்றுதும்! அன்னையைப் போற்றுதும்!



ஸ்டீபன் லீகாக்
தமிழ்: தம்பி சீனிவாசன்

வருஷத்துக்கு ஒரு நாள் மே மாதத்தில் ''அன்னையின் தினம்'' கொண்டாடுகிறோமே எவ்வளவு நல்ல பழக்கம்! எங்களைப் போன்ற பெரிய குடும்பத்தினருக்குத்தான் அதன் அருமை தெரிகிறது. அந்த நாளை நன்றாகக் கொண்டாடுவது என்று தீர்மானித்தோம். என்ன உயர்ந்த கருத்து! நமது தாயார் நமக்காக வருஷக் கணக்காய் என்ன பாடுபட்டிருக்கிறாள்! நமக்காக எவ்வளவு தியாகம் புரிந்திருக்கிறாள் — என்றெல்லாம் நினைத்துப் பார்க்க ஒரு வாய்ப்பு.

ஆகவே அன்றையதினத்தை ஒரு விடுமுறை நாளாகக் கொண்டாடுவது. அன்று அம்மாவைச் சந்தோஷப் படுத்துவது என்று தீர்மானித்தோம். அப்பா அன்று ஆபீசுக்கு லீவு போடுவதாய்ச் சொன்னார். என் அக்காவும் நானும் கல்லூரிக்கு மட்டம் போட்டோம். தங்கையும் தம்பியும் பள்ளிக்கூடம் போகவில்லை.

கிறிஸ்துமஸ்போல் இந்த நாளைக் கொண்டாட வேண்டும் என்பது எங்கள் திட்டம். வீடெல்லாம் ஒழுங்காக்கி, அலங்காரம் செய்து, அங்கங்கே தோரணமும் வேதவாக்கும் தொங்க விடலாம் என்று தீர்மானித்தோம். அதெல்லாம் அம்மாவையே செய்யும்படி கேட்டுக் கொண்டோம். அவள்தான் கிறிஸ்துமஸ் சமயத்தில் இப்படி எல்லாம் செய்வது வழக்கம்.

இவ்வளவு நல்ல விசேஷத்துக்குப் புதுத் தொப்பி இருந்தால் நன்றாக இருக்கும் என்று என் அக்காவும் தங்கையும் புதிதாக வாங்கிக் கொண்டார்கள். அம்மா அதை அழகாகச் சிங்காரித்துக் கொடுத்தாள். அப்பா அந்த நாளைக் கொண்டாடும் வகையில் தனக்கும் எனக்கும் தம்பிக்கும் புது சில்க் டை வாங்கினார். அம்மாவுக்கும் புதிதாக ஒரு தொப்பி வாங்கினால் என்ன என்று நினைத்தோம். ஆனால் அவள் பழைய தொப்பியையே விரும்புவதாகத் தோன்றிற்று. ''அதிலே அவள் எவ்வளவு அழகாக இருக்கிறாள்!'' என்று அக்காவும் தங்கையும் சொல்லி விட்டார்கள்.

காலையில் சாப்பிட்டதும் அம்மாவை ஆச்சரியப்படுத்தும் வகையில் அவளை மோட்டார்காரில் கொஞ்ச தூரம் உல்லாசமாக அழைத்துப் போவது என்று ஏற்பாடு செய்திருந்தோம். அதுமாதிரி அம்மா வெளியே போவதே கிடையாது. பாவம் அவளால் எப்படி முடியும்? எல்லா வேலைகளையும் ஒண்டிக்காரியாக ஒரே ஒரு வேலைக்காரித் துணையுடன் செய்ய வேண்டும். ஆனால் இந்த மாதம் கிராமப்புறங்கள் அழகாக இருக்கும். காலை நேரம் பல மைல் தூரம் காரில் சென்றால் கண்ணுக்கினிய காட்சிகள், மனத்துக்குத் தெம்பாக இருக்கும். இப்படித் திட்டம் போட்டோம்.

ஆனால் அன்று காலையில் அப்பா திட்டத்தைச் சற்றே மாற்றி விட்டார். எப்படியும் காரை வாடகைக்குப் பிடிக்கப் போகிறோம். அதை ஊர்வலமாக விட்டால் என்ன? மலையருவிக்கு விட்டால் என்ன? அங்கே போனால் உல்லாசமாகப் பொழுது போக்கலாம், மீன் பிடிக்கலாம் என்பது அவர் யோசனை. ''ஒரு காரணமும் இல்லாமல் கார்ச் சவாரியா? மீன் பிடிக்கப் போவது என்றால் ஒரு லட்சியமாவது இருக்கிறது'' என்றார் அவர்.

அதற்கு முதல் நாள்தான் அவர் புதிதாக ஒரு தூண்டில் வாங்கியிருந்தார். ஆகவே மீன் பிடிக்கப் போவது பொருத்தமாக இருந்தது. ''உனக்காகத்தான் இதை வாங்கினேன். வேண்டுமானால் நீயும் கொஞ்ச நேரம் மீன் பிடிக்கலாம்'' என்றார் அப்பா. ''வேண்டாம். பார்த்துக்கொண்டிருந்தாலே எனக்குப் போதும்'' என்று மறுத்து விட்டாள் அம்மா.



கார் சவாரிக்கு எல்லாம் தயாராயிற்று. பசித்தால் இருக்கட்டும் என்று சொல்லித் தின்படிகள் தயாரித்தோம். பகல் விருந்துக்கு எப்படியும் வீட்டுக்குத் திரும்ப வேண்டும். அதுவும் அன்று பெரிய விருந்தாயிற்றே. கிறிஸ்துமஸ், வருஷப் பிறப்பு போல. தின்படிகளை நிரப்பிய கூடையை அம்மா காரில் வைக்கத் தயாராகக் கொடுத்தாள்.

கார் வாசலில் வந்து நின்றது. நாங்கள் எதிர் பார்த்த அளவு அதில் இடம் இருக்கவில்லை. சாப்பாட்டுக் கூடையும் அப்பாவின் மீன் பிடிப்புச் சாமான்களுமே பாதி இடத்தை அடைத்துக் கொண்டன. எல்லாருக்கும் அதிலே இடம் இல்லை என்பது தெளிவாகத் தெரிந்தது.

''பரவாயில்லை. நான் வீட்டிலேயே இருந்து விடுகிறேன். தோட்டத்திலே கொஞ்சம் பொழுது போக்குகிறேன்'' என்றார் அப்பா. ''மூன்று வருஷங்களாக நான் உல்லாசப் பயணம் ஒன்றும் போனதே யில்லை. அதனால் என்ன? இங்கே தோட்டத்திலே சாக்கடைக் குழி வெட்ட வேண்டும். அதற்குத் தனி ஆள் வைத்துக் கூலி கொடுக்காமல் இன்று நானே முடித்து விடுகிறேன். நீங்கள் போங்கள். உற்சாகமாக இருங்கள். நான் ஒன்று, முட்டாள் மாதிரி இதற்கெல்லாம் ஆசைப்படுகிறேன்'' என்றார்.

அப்பாவாவது வீட்டில் இருந்துவிடுவதாவது? எங்களுக்குச் சம்மதமில்லை. அக்காவும் தங்கையும் வீட்டிலே தங்கிவிடலாம். அப்படி இருந்தால் விருந்து வேலைக்குச் சமையற்காரிக்கு உதவியாக இருக்கும். ஆனால் புத்தம் புதிய தொப்பி வாங்கி அணிந்து விட்டு வீட்டிலே அடைந்து கிடப்பதாவது! தம்பியும் நானும் போகாமல் தங்கிவிடலாம். ஆனால் என்ன பிரயோசனம்? சமையல் வேலைக்கு நாங்கள் உதவவா போகிறோம்?

கடைசியில் அம்மாவே வீட்டில் தங்குவது என்று முடிவாயிற்று. பாவம், அவள் வெளியிலே அலையாமல் நிம்மதியாக இருக்கலாம் இல்லையா? சமையலும் நடக்கும். பார்க்கப் போனால் அவளுக்கு மீன் பிடிப்பில் ஒன்றும் அக்கறை கிடையாது. அதோடு வெட்ட வெளியில் போனால் அவளுக்கு ஜல தோஷம் வந்தாலும் வரும் என்று அப்பா சொல்லி விட்டார். ''நான் உன்னை வெளியே அழைத்துப் போனேன், உனக்கு உடம்புக்கு வந்து படுத்து விட்டாய் என்றால் எனக்குத் தாங்க முடியாது'' என்றார் அவர். எங்களைப் பார்த்து, ''என்ன பசங்கள்! அம்மா நிம்மதியாக இருக்கணும் என்கிற அக்கறையோ பொறுப்போ இல்லாமல்? அவள் உங்களுக்காக என்ன பாடு பட்டிருப்பாள்? ஏதோ அவளுக்கு ஒருநாள் ஓய்வு கொடுக்கலாம் என்றுதான் இந்த மீன் பிடிக்கும் திட்டத்தையே வைத்துக் கொண்டேன்'' என்று பொரிந்து தள்ளினார்.



''நான் கடறதுக்கு முன்னாடியே என் இப்படி மூடிட்டாங்க?''

''அம்மா வாழ்க!'' என்று சொல்லிக் கொண்டே புறப்பட்டோம். வாசல் வராந்தாவில் நின்று கொண்டு பார்வையிலிருந்து மறையும் வரை பார்த்துக் கொண்டிருந்தாள் அம்மா. திரும்பித் திரும்பி அப்பா கையை ஆட்டிக் கொண்டே வந்தார்.

மலை அருவியில் உற்சாகமாகப் பொழுது போயிற்று. அப்பா பெரிய பெரிய மீன்களைப் பிடித்துப் போட்டார். ஒருவேளை அம்மா கூட வந்திருந்து மீன் பிடித்திருந்தால் அவ்வளவு பெரிய மீனை அவளால் இழுக்கக்கூட முடியாது. தம்பியும் நானும்கூட மீன் பிடித்தோம். அக்காவும் தங்கையும் அங்கே எத்தனையோ பேரைப் பார்த்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். புதுப் புது சிநேகம் பிடித்துக் கொண்டார்கள்.

திரும்பும்போது நேரமாகி விட்டது. மணி ஏழாகி விட்டது. அம்மாவுக்கு நாங்கள் நேரம் கழித்து வருவோம் என்று தெரியும் போலிருக்கிறது. விருந்துச் சாப்பாட்டைச் சூடு ஆறாமல் வைத்திருந்தாள். வந்தவுடனே அப்பா கை கால் கழுவ உதவினாள். பிறகு அக்கா தன் தங்கைக்கு உடை மாற்றிக் கொடுத்தாள்.

எல்லாம் தயாரானதும் சாப்பாட்டுக்கு உட்கார்ந்தோம். என்ன பிரும்மாண்டமான விருந்து! கிறிஸ்துமஸ் கெட்டது! இதையும் அதையும் கொண்டு வர அம்மா அடிக்கடி எழுந்து எழுந்து உள்ளே போவதும் வருவதுமாக இருந்தாள். கடைசியில் இதை அப்பா கவனித்து விட்டார். ''இப்படியா அலைவது?'' என்று செல்லமாகக் கடிந்து கொண்டார். அவளுக்குத் தொந்தரவு தராமல், தம் பக்கத்திலிருந்த அலமாரியிலிருந்து ஊறுகாய் ஜாடியைத் தாமே எடுத்தார்.

சாப்பாடு முடிய ரொம்ப நேரமாயிற்று. ஒரே கொம்மாளம்தான். சாப்பிட்ட பிறகு தட்டெல்லாம் கழுவ நாங்கள் முன்வந்தோம். அம்மா தானே அதையெல்லாம் செய்து விடுவதாகச் சொன்னாள். பாவம், அவள் ஆசையைக் கெடுப்பானேன் என்று நாங்கள் அவளைத் தடுக்கவில்லை!

அன்று படுக்கப் போவதற்கு நேரமாகி விட்டது. ''குட் நைட்'' சொல்லி அம்மாவுக்கு முத்தம் கொடுத்தோம். ''இன்று ரொம்ப சந்தோஷமான நாள்'' என்று சொன்ன போது அவள் கண் பனித்திருந்தது போலத் தோன்றியது. நாங்கள் காட்டிய அன்பு அவளை எப்படி உருக்கி விட்டது என்பது தெரிந்தது.



# பாரத நாட்டுச் சிங்கங்கள்!

தே. ராமமூர்த்தி

நம் பாரத நாட்டிலும், ஆப்பிரிக்கக் கண்டத்திலும் மட்டுமேதான் சிங்கங்கள் வாழ்ந்து வருகின்றன. நம் நாட்டுச் சிங்கங்கள் குஜராத்திலுள்ள ஜுனாகட் மாவட்டத்தில் கிர் காடுகளில் உள்ளன. இங்கு குறிப்பிட்ட சில சதுர மைல் பரப்பளவுக்குள் சிங்கங்கள் சுதந்திரமாக உலவி வரவும், வேட்டையாடுபவர்களின் குண்டுகளினால் அல்லலுறாமல் இருக்கவும் அதிகாரிகள் உதவி புரிகின்றனர். இத்தகைய பாதுகாப்பில்லாவிடில் சிங்கத்தின் எண்ணிக்கை என்றோ மங்கி மறைந்திருக்கும்.

நீதிக்கும் நேர்மைக்கும் எடுத்துக்காட்டாக உள்ள சிங்கம், பண்டைய அரசர்களின் சிங்காதனத்திலும் அசோகனது தூணிலும் இடம் பெற்றது. சிங்கமுகாசுரன் வாயிலாகவும் அன்னை துர்க்கையின் வாகனமாகவும் புராணத்திலும் இடம் பெற்றது. இப்படிப் புராணத்திலும் சரித்திரத்திலும் இடம் பெற்ற சிங்கம் பாரதத்தில் முதலில் தோன்றியதன்று. மத்திய ஐரோப்பிய நாடுகளிலிருந்து நமது நாட்டுக்கு வந்த விலங்கென்று ஆராய்ச்சியாளர் கூறுவர்.

சிங்கங்கள் வாழும் கிர் காடுகள் அடர்ந்த மரங்களையுடைய பெரிய காடுகள் அல்ல. அங்கொன்றும் இங்கொன்றுமாகவும் குட்டையாகவும் கட்டையாகவும் வளர்ந்துள்ள மரங்களையும் சிறு குன்றுகளையும் பல திறந்தவெளிகளையும் கொண்ட சுமார் 585 சதுர மைல் பரப்புள்ள பிரதேசமாகும். புலிகள் பதுங்கி மறைந்து வாழும் இயல்புள்ளவை. சிங்கங்கள் பயமின்றித் திறந்த வெளிகளில் சுதந்திரப் போக்குடன் திரிபவை. இதன் காரணமாகவே சிங்கங்கள் வேட்டைக்காரர்களின் குண்டுகளுக்கு விரைவில் இலக்காயின. மழை குறைந்த வறண்ட காடுகளில் கடும் கோடை நாட்களில் தண்ணீர்ப் பஞ்சம் ஏற்படும் போது கூட்டமாக நீர் நிலைகளைத் தேடிச் சிங்கங்கள் அலைகின்றன. மழை நாட்களைத் தவிர மற்ற நாட்களில் இவற்றைக் காண்பது சௌகரியம். டிசம்பர் முதல் ஏப்ரல் வரை இவற்றைக் காணச் சிறந்த காலமென்கிறார்கள். நல்ல வெப்ப தட்ப நிலையும், போக்குவரத்துக்கான சீரான பாதைகளும் கொண்ட நாட்கள் இவையேயாகும். மேலும் குட்டிகளுடன் பெண் சிங்கங்களைக் காணக்கூடிய காலமும் இதுவே.

ஆப்பிரிக்க நாட்டுச் சிங்கத்தை விடக் கிர் பிரதேச சிங்கம் மிகவும் அழகானது. இது சுமார் 450 பவுண்டு எடையும், 9 அடி நீளமும் உடையது. ஆப்பிரிக்கச் சிங்கம் பத்து அடிக்கு மேல் வளர்ந்த போதிலும் அதன் வாலில் கிர் சிங்கத்தைப் போல் அழகிய கருப்புக் குஞ்சம் கிடையாது. சிங்கத்தின் வாழ்நாள் சுமார் முப்பது ஆண்டுகள். ஆண் சிங்கம் ஐந்து வயதிலும் பெண் சிங்கம் இரண்டரை முதல் மூன்று வயதிலும் இனப் பெருக்கத்தைத் தொடங்குகிறது. கருவுற்ற 116 நாட்களில் பெண் சிங்கம் இரண்டு முதல் மூன்றுவரை குட்டிகள் போடும். குட்டிகளைத் தாய்ச் சிங்கம் கண்ணும் கருத்துமாகப் பாதுகாத்துக் கொஞ்சம் கொஞ்சமாக மாமிச உணவை உண்ணக் கற்றுக் கொடுக்கிறது.



புலிகளைப் போலன்றி ஆண் சிங்கமும் குடும்பத்துடனிருந்து அவை உணவு தேட உதவி புரிகிறது. சாதாரணமாக ஒரு குடும்பத்தில் பத்துச் சிங்கங்கள் காணப்படுகின்றன.

சிங்கம் உணவுக்கான மாட்டையோ அல்லது வேறு மிருகத்தையோ வேட்டையாடும் போது ஆண் சிங்கம் வேட்டைக்கான மிருகத்தைத் துரத்தும். கும்பலாக மற்ற சிங்கங்கள் பதுங்கி யிருக்கும். சாதாரணமாகப் பெண் சிங்கமே ஓடிவரும் துரத்தப்பட்ட மிருகத்தை அடித்து வீழ்த்துகிறது. கொல்லப்பட்ட மிருகத்தைச் சிங்கக் குடும்பம் பகிர்ந்து கொண்டு உண்ணும். அப்பொழுது சிறு குட்டிகள் மாமிசத்தைப் பிய்த்தெடுத்து உண்ணும் முறையைத் தாய்ச் சிங்கத்தினிடமிருந்து கற்றுக் கொள்கின்றன. சில சமயங்களில் பெண் சிங்கம் தனியாக வந்து மேய்ந்து கொண்டிருக்கும் மாட்டையோ, ஆட்டையோ கொன்று வீழ்த்தும். பின்பு குடும்பத்தாரை அழைத்து வரச் செல்லும். அப்போது இறந்த மிருகத்தைப் புலிகளைப் போல் இலைகளைக் கொண்டு மூடிவிட்டுப் போகாமல் இறந்த வெளியிலேயே போட்டுவிட்டுப் போகும். சிங்கங்கள் உணவு உண்டபின் எஞ்சியதை எடுத்துக் கொள்ளக் கழுகு முதலிய பறவை இனங்கள் மரங்களில் உட்கார்ந்தோ வட்டமிட்டுக் கொண்டோ காத்துக்கொண்டிருக்கும். ஒரு சிங்கக் குடும்பம் உண்ணுகையில் மற்றொரு குடும்பத்தினர் அவ்வழியே வர நேரிட்டால் உணவுக்காகச் சண்டை ஏற்படாது. புதிய சிங்கக் குடும்பத்தினர் முதலில் உண்டு கொண்டிருக்கும் சிங்கங்கள் விட்டுச் சென்ற இறைச்சியை உண்ணக் காத்திருப்பதே வழக்கம்.

இயற்கைச் சூழ்நிலையில் திரிந்து கொண்டிருக்கும் வனராஜனையும் அவனது குடும்பத்தினரையும் காணவே ஆயிரக் கணக்கான பிரயாணிகள் வருடந்தோறும் இக்காடுகளுக்கு வருகின்றனர். பிரயாணிகளுக்குச் சிங்கங்களைக் காண்பிக்கக் காட்டிலாகா அதிகாரிகள் பிரயாசைப்படுகிறார்கள். அங்குள்ள மரமொன்றில் மாட்டைக் கட்டிப் போடுகிறார்கள். மாட்டைக் கொன்று சிங்கங்கள் உண்ணும்போது பிரயாணிகளை வெகு அருகில் — அதாவது சுமார் 30 அடி தூரத்தில் அழைத்துச் சென்று காண்பிக்கிறார்கள். உணவருந்துவதில் ஈடுபட்ட சிங்கங்களும் அதன் குட்டிகளும் மனிதனையோ அல்லது அவர்களது கார்களின் சத்தத்தையோ சிறிதும் பொருட்படுத்தாமல் இருக்கின்றன. பிரயாணிகள் அப்போதைய காட்சியைப் புகைப்படங்களும் சினிமாப் படங்களும் எடுத்துக்கொள்கிறார்கள்.

காடுகளுக்கு மத்தியிலும் அருகிலும் கிராமங்கள் உள்ளன. இங்குள்ள மாடுகளைச் சிலசமயம் சிங்கம் தூக்கி எடுத்துச் செல்வதும் உண்டு. கோபமடைந்த கிராமவாசிகள் இறைச்சியில் விஷம் கலந்து சிங்கத்தை இறக்கச் செய்திருக்கின்றனர். இப்போதெல்லாம் சிங்கத்தின் வளர்ச்சியில் அக்கறை கொண்ட அரசாங்கம் சிங்கத்தால் கொல்லப்பட்ட மாடுகளுக்காகக் கிராமவாசிகளுக்கு நஷ்ட ஈடு அளிக்கிறது.






பழைய காலத்தில், அதாவது நான் பள்ளியில் படித்த காலத்தில், பள்ளிப் பரீட்சைகளில் தேற மூன்றே மூன்று வழிகள்தான் இருந்தன. ஒன்று, பாடங்களை நன்கு படிப்பது. இரண்டு, பக்கத்துப் பையனின் பரீட்சைப் பேப்பரைப் பார்த்துக் காப்பியடிப்பது. மூன்று, எந்தப் பரீட்சைப் பேப்பரை யார் திருத்துகிறார்கள் என்று தெரிந்து கொண்டு அவர்கள் பின்னால் தகப்பனாரை விரட்டுவது.

ஆனால் இந்த மூன்று வழிகளும் எளிதான வழிகள் என்று சொல்ல முடியாது. முதல் வழியான பாடங்களைப் படிப்பது எத்தனை கஷ்டமான காரியம், அதிலும் இந்தக் காலத்தில் எத்தனை கஷ்டமான காரியம் என்பது இந்தக் காலத்து மாணவர்களுக்குத்தான் தெரியும். கல்லூரியை விட்டதும், கடற்கரைக்குப் போய், ''யார் யாரையோ'' பார்க்க வேண்டியிருக்கிறது. பிறகு நண்பர்களின் வீட்டுக்குச் சென்று அரட்டையடிக்கவேண்டியிருக்கிறது. பிறகு 9-30 மணி இரவுக் காட்சிக்குப் போகவேண்டி யிருக்கிறது. இவை இல்லாத நாட்களில் வீட்டில் சற்று உட்கார்ந்து படிக்கலாம் என்றாலோ, ரேடியோவிலிருந்து வரும் காதல் பாட்டுக்கள் மனத்தை எங்கேயோ இழுத்துச் செல்கின்றன. ஆகவே, தற்கால மாணவர்களுக்கு முதல் வழி ஒத்து வரவே வராது.

இரண்டாவது வழியிலோ, அதாவது பக்கத்துப் பையனைப் பார்த்துக் காப்பியடிக்கலாம் என்பதிலோ அநேக இடைஞ்சல்கள் உள்ளன. இதற்கு, முதலில், பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் பையன் நம்மைவிடக் கெட்டிக்காரப் பையனாக இருக்க வேண்டும். ஆனால் இந்தக் காலத்தில் எல்லாருமே படிக்கக் கஷ்டப்படுவதால் அது கிடைக்கும் என்று சொல்ல முடியாது. முக்கால்வாசி, அவன் நம்மைப் பார்த்துக் காப்பியடிக்கலாம் என்று வந்திருப்பான்.

இதைப் போலவே, மூன்றாவது வழியும் கடினமான வழிதான். யார் பரீட்சைப் பேப்பர்களைத் திருத்துகிறார்கள் என்று கண்டுபிடிப்பதோ, அவர்களைத் தேடிப் போவதோ கஷ்டமான காரியம் அல்ல. ஆனால் வெறும் கையுடன் போனால் காரியம் நடக்காது. ஆனால் விலைவாசிகள் இப்படி விற்கும் காலத்தில் எல்லாருமே வெறும் கையுடன் காணப்படுவதாகத்தானே தோன்றுகிறது!

ஆகவே, இந்தக் காலத்து மாணவர்கள் என்ன பண்ணப் போகிறார்கள் என்று நான் நினைத்துக் கொண்டிருந்த சமயத்தில், பரீட்சையில் தேற, அவர்களே மூன்று புதிய வழிகள் கண்டுபிடித்து விட்டதைக் குறித்துச் சந்தோஷப்படுகிறேன்.

அவர்கள் கண்டுபிடித்துள்ள முதல் வழிக்கு ''டில்லி வழி'' என்று பெயர் வைக்கலாம். சம்பளம் போதாது என்று டில்லி உபாத்தியாயர்கள் சில மாதங்களாகப் பார்லிமெண்டுக்கு முன்னால் வேலைநிறுத்தம் செய்து வந்ததால்



பள்ளிகளில் பாடம் அதிகம் நடக்கவில்லை. ஆகவே, டில்லியில் உள்ள இரண்டு லட்சம் மாணவர்கள் பரீட்சை என் இல்லாமலே மேல் வகுப்புக்கு அனுப்பப்பட்டு விட்டனர்.

எப்பொழுது இந்த வருடம் அவர்கள் இந்த வழியில் தேறி விட்டார்களோ, அடுத்த வருடம் அவர்கள் சும்மா இருப்பார்களா! வேலைநிறுத்தம் செய்யும்படி வாத்தியார்களைக் 'குடை குடை' என்று குடைய மாட்டார்களா! அதிகச் சம்பளம் கோரி வேலை நிறுத்தம் செய்ய விரும்பும் வாத்தியார்கள் மாணவர்களின் தூண்டுதலுக்குப் பிறகும் பேசாமல் இருப்பார்களா, என்ன?



''ஏம்பா! சாந்தும் புட்டி ரொம்ப விலையாம்பா? இந்த அம்மா என்னமோ சும்மா கத்துறாளே. கொஞ்சுண்டு உன் கோட்டு மேலே கொட்டிட்டேன்; அதுக்கு போயி...''

இந்த ''டில்லி வழி''யை அதாவது தலைநகரம் காட்டியுள்ள வழியைப் பாரதத்தின் அத்தனை மாணவர்களும் பின்பற்றலாம். ஆனால் டில்லி சொல்லி நாம் கேட்பதா, டில்லியைப் பின்பற்றுவதா என்று நினைக்கும் மாணவர்களும் இருப்பார்கள் அல்லவா, அவர்கள் இரண்டாவது வழியான ''இந்தி வழி''யைப் பின்பற்றலாம்.

'இந்தி வழி'யும் பள்ளிகளில் பாடம் நடக்கவொட்டாமல் அடிப்பதுதான். பரீட்சைக்கு இரண்டு மாதங்களுக்கு முன்னால் இந்திப் போராட்டத்தை ஆரம்பித்து வைத்தால் தன்னைப் போலப் பாடங்கள் நடக்காது. கடைசியில் பரீட்சையில்லாமலே மாணவர்களை மேல் வகுப்புக்கு அனுப்புவதைத் தவிர வேறு ஒன்றும் செய்ய முடியாது. முன் யோசனையுள்ள பல மாணவர்கள் அசைக்க முடியாத இந்த வழியைப் பின்பற்றி வெற்றி கண்டிருக்கிறார்கள். இந்த ''இந்தி வழி''யில்தான் 240 உதகை மாணவர்கள் மேல் வகுப்புக்களுக்கு அனுப்பப்பட்டார்கள் என்று சொல்லப்படுகிறது.

வாத்தியார்களும் வேலைநிறுத்தம் செய்ய மாட்டேன் என்கிறார்கள், தாங்கள் இந்திக்காரர்களாதலால். ''இந்தி வழி''யையும் பின்பற்றுவதற்கில்லை, இவர்கள் என்ன செய்வது? இவர்களுக்காகத்தான் மூன்றாவது வழியைப் பாட்னா மாணவர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள். பாட்னா மாணவர்கள் கண்டுபிடித்துள்ள இந்த வழிக்குப் ''பாட்னா வழி'' என்று பெயர் வைப்பதுதான் பொருந்தும்.

இந்த வழியில், நாம் பரீட்சை அதிகாரிகளையும், கல்வி அதிகாரிகளையும் ''கேரோ'' செய்ய வேண்டும். ''பரீட்சையில்லாமல் பாஸ் என்று அறிவித்தால்தான் கேரோவை நிறுத்துவோம்'' என்று சொல்ல வேண்டும். உடனே அதிகாரிகள் 'கேரோ'வுக்குப் பயந்து, ''பரீட்சையில்லாமலே பாஸ்'' என்று அறிவித்து விடுவார்கள்.

பாட்னா என்ஜினீரிங் கல்லூரியைச் சேர்ந்த 200 மாணவர்கள் இப்படித் தான் பாஸ் செய்தார்கள்.



ஆக, மூன்று புதிய வழிகளை மாணவர்களே கண்டு பிடித்துக் கொண்டு விட்டபடியால், இனி அவர்களைப்பற்றி நாம் கவலைப் படத் தேவையில்லை!

அந்தப் பெரிய படகுக் கார், அச் சிறிய வீட்டின் எதிரில் வந்து 'ஜம்' என்று நின்றதை ஒருவரும் கண்கள் விரியக் கண்டு வியக்க வில்லை. அது ஒரு சாதாரண நிகழ்ச்சி, அந்த வட்டாரத்தில் உள்ள ஜனங்களுக்கு வழக்க மாகி விட்டது. டிரைவர் ஆசனத்திலிருந்து இறங்கிய இளைஞன் நல்ல உயரம். அதற் கேற்ற பருமன், கருமை நிறம்தான். ஆனால் களையான முகம். அணிந்திருந்த ஆடை பால் போல் வெள்ளை நிறம். தோள் பட்டையில் ஆங்கிலத்தில் ப. கெ. க. என்ற மூன்று எழுத் துக்கள் ''பார்வதம் கெமிகல் கம்பெனி'' என்பதைக் குறித்தன. அவன் அந்தக் கம்பெனி மானேஜிங் டைரக்டர் சுவாமி நாதனின் கார் ஓட்டி. பெயர் சந்தர். காரை விட்டு உள்ளே இறங்கிய வன் தன் தொப்பியை 'விர்' என்று வீசி அங் கிருந்த நாற்காலியில் எறிந் தான். ''சாரதா'' என்று கூப்பிட்டதும் சமையல் அறையிலிருந்து வெளியே வந்தாள் யுவதி. அந்த ஆடவனைக் கண்டதும் கொஞ்சம் ஆச்சரியத்துடன் புருவத்தைத் தூக்கிவிட்டு, ''நீங்களா?'' என்றாள்.

''ஏன் ஆச்சரியமாக இருக்கிறதா சாரதா? நான் வரக் கூடாதா ?''

''அப்படி. ஒன்றுமில்லை. நீங்கள் சாதாரணமாக இந்த நேரத்தில் இந்த வீட் டுக்கு வரும் வழக்கம் கிடையாதே என்று கேட்டேன். ஏதாவது சாப்பிட, குடிக்கக் கொடுக்கட்டுமா ?''

''ஒன்றும் வேண்டாம். உன்னைப் பார்த் துக் கொண்டிருந்தாலே போதுமே. ஆகாரம், ஜலம் ஒன்றுமே வேண்டாமே.'' ஆமாம், சந்தர் சொல்வதில் தவறொன்றுமில்லை. சாரதா பார்ப்பதற்கு நல்ல அழகி. சிவந்த மேனி. அவிழ்ந்து அள்ளி முடித்த கூந்தல், கரிய விழிகள், கட்டான உடல். பள்ளி இறுதி வரை படித்தாள். புகுமுக வகுப்பு செல்ல வசதி இல்லை. தாயார் மட்டும் இருந் தாள். அவள் உழைத்தாள், பெண்ணை இப்படி ஓர் அழகியாக வளர்த்தாள்.



அம்மா வேலைக்குச் சென்று விட்டாள். பெண் வேலையைத் தேடிக் கொண்டிருந்தாள். வேலை கிடைத்தால் தாயாரை ஓய்வெடுக்கச் சொல்லலாம் என்ற எண்ணம். ஆனால் அவள் இப்பொழுது இருக்கும் வேலையை விட்டு வர விரும்பமாட்டாள். விசுவாசமாக வேலை செய்பவள் அவள். சந்தர் அவர்களுக்குத் தூரத்து உறவு. ஆனால்



நெருங்கி வர மிகவும் ஆசை, ஆட்சேபனை இல்லை. வேணி இன்னும் வரவில்லை. இருவரும் நாளை எதிர்நோக்கித்தான் இருந்தார்கள்.

''அது சரி! இன்று என்ன விடுமுறையா?'' என்று கேட்டாள் சாரதா.

''விடுமுறையா ? இன்று என் எஜமானரை ஆபீசுக்குக் கொண்டுவிட்டேன். என்னவோ தெரியவில்லை. 'சந்தர்! இன்று எனக்குக் கார் வேண்டாம். ஓர் அவசரக் கூட்டம் இருக்கிறது. நீ காரை எடுத்துக் கொண்டு போய் விடு' என்று கூறிவிட்டார். ஆகையால் கார் இந்த யஜமானிக்கு வேண்டுமென்றால் உபயோகித்துக் கொள்ளலாம்.''

''என்ன? எனக்கு உபயோகத்துக்கா ? அந்த யஜமானிக்கு வண்டி வேண்டியிருந்தால் !''

''சாரதா! அந்தக் கவலை வேண்டாம். அந்த யஜமானியம்மாள் மூக்கைச் சிந்திக் கொண்டு, கண்ணால் ஜலம் விட்டுக் கொண்டு படுத்துக் கொண்டிருக்கிறார்கள்.''

''ஐயோ, பாவம்! அப்படி அவர் அழும் படியாக என்ன நடந்து விட்டது?''

''அழுவதா! அவர் ஏன் அழப் போகிறார்? நான் சொல்ல வந்தது ஜலதோஷ அழுகை தான். முட்டாக அவருக்கு ஜலதோஷம். 'ஆம் எங்கேஜ்மெண்ட்ஸ் கான்ஸல்ட்'ன்னு என்னிடம் சொல்ல முடியாமல் இணறிச்

# பங்குக்கார்

'ராஜ்'

சொல்லி விட்டார். ஆகையினாலே இன்று உனக்கும் எனக்கும் வாகன சுகம் என்று கால பலனில் படித்த ஞாபகம்.''

''அதுக்கு இப்போ என்ன பண்ணனும் கிறீங்க?'' என்று குழைந்து புன்னகை புரிந்தாள் சாரதா. விழுந்தது கன்னத்தில் ஒரு குழி. அந்தக் குழியின் அழகில் சொக்கி விழுந்தான் சந்தர்.

''சாரதா, நீ என்னைப் பார்க்கும்போதெல்லாம், 'உங்களுக்கென்ன? தினம் பொழுது விடிஞ்சு பொழுது சாயும் வரை கார் சவாரி. கொடுத்து வைத்தவர்' என்று கேலி பண்ணுவையே. பாவம்! நீ பஸ்ஸிலே பள்ளிக்கூடம் போய் வரும்போதெல்லாம் என் மனம் படாதபாடு படும். அட பள்ளிக்கூடம் முடிஞ்சப்புறமும் வீட்டுக்குத் துணையாக உள்ளேயே அடைஞ்சு கிடக்கிறயே' என்று என் மனசு ரொம்ப வருத்தப்படுது.''

''அதுக்கென்ன இப்போ ? ஊர்க்குருவி பருந்தாக முடியுமா?''

''முடியாது. ஒத்துக்கிறேன். ஆனால் சந்தர்ப்பம் வர்ற போது உபயோகப்படுத்திக்கலாமேன்னுதான் சொல்றேன்.''

''புரியவில்லையே !''

"உனக்கெல்லாம் சொல்லிப் புரிய வைக்கணும். அசடு. படிப்பு இருந்து என்ன பிரயோசனம்? ஒரு வாலிபன், ஒரு குமரி. படகுக் கார். இன்னும் என்ன வேணும்? பேசாமல் சொன்னதைக் கேட்க வேண்டியது தானே?"

"என்ன சொன்னீங்க, கேட்டிருவேன் அம்மாகிட்ட இங்கே."

"ஐயோ, வைத்தியரே! இதுக்கெல்லாம் அம்மாவையும், ஆட்டுக் குட்டியையுமா கேட்பாங்க? உள்ளே போனானாம். கொஞ்சம் அலங்காரமா உடை உடுத்திக் கொண்டானாம், பளிச்சென்று என் பக்கத்திலே காரில் உட்கார்ந்தானாம். ஒரு ரவுண்டு சுத்திட்டு வந்தானாம்."

"நன்னாச் சொன்னீங்க. "தானாம்", "தானாம்"என்று இப்படி ஒரு தப்புத் தாளம் போட்டுண்டு! நமக்கு இன்னும் கலியாணம் ஆகல்லே, நான் கன்னிப் பொண்ணு. நீங்க இன்னும் வடுமாங்கா."

"அது என்ன, வடுமாங்காயும், பழையதும்?"

"அதுதான் கல்யாணமாகாத பிரம்மசாரி. பூணூல் போடும் பிள்ளைகளை "வடு"வை ஆசீர்வதிக்கும்படி உபநயனப் பத்திரிகையிலே போடுவாங்களே, படிச்சதில்லையா?"

"ஐயோ! ஐயோ! மூளையே மூளை. நான் இப்போ என்ன செய்யச் சொல்லிட்டேன்? கல்யாணம் ஆன பிறகுதான் காரில் ஏறிப் போகணுமா? பள்ளியிலே நீயும் நானும் தனியாக எத்தனை தடவைகள் போயிருக்கோம். ?"

"அதுதான்.. பள்ளியிலே போறது மாதிரியா இரண்டு பேரும் தனியாகப் படகுக் காரிலே போறது?"

"சரிதான். வீட்டிலே போது போகாமல் நிறைய சிறுகதைகள் படிக்கிறே போலிருக்கு. புரிஞ்சுது. ஏதாவது 'அக்கினிப் பிரவேசம்', 'வாயுப் பாய்ச்சல்', 'வருண முழுக்குன்னு' படிச்சிருப்பே. பயந்தாங்கொள்ளி. நான் அப்படி என்ன கயவனா, காமுகனா? இப்போ என்னோடே வந்தா இருட்டுக்கு முன்னாலே உன்னை வீடு சேர்த்துடப் போறேன். என்னுடன் வரமாட்டாயா, சாரதா? கெஞ்சுகிறேன். வா, சாரதா!"

இந்தக் கெஞ்சலைக் கேட்ட சாரதாவுக்கு மனம் ஒரு மாதிரி ஆகிவிட்டது. 'ஐயோ, பாவம். கூடப் போனால்தான் என்ன? அம்மாவோ இரவு திரும்புவாள். சந்தரோ நமக்கென்று ஏற்பட்டவர்தானே' என்று நினைத்துக் கொண்டு 'சரி! வருகிறேன்' என்று கூறி உள்ளே சென்றாள். "அப்படி வா வழிக்கு!" என்று கூறிக் கொண்டே தன் கோட் காலரை ஒரு வெற்றிப் பெருமிதத்துடன் இழுத்து விட்டுக் கொண்டான் சந்தர். எளிமையாகத்தான் தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்தாள் சாரதா. ஆனால் அவளைப் பார்த்த சந்தருக்கு அவள் ஓர் அதிரூப சுந்தரியாகத் தோன்றினாள். அவள் மேல் வைத்த கண்களை எடுக்கவில்லை அவன்.

"என்ன அப்படிப் பார்க்கிறீங்க. புறப்படுங்க, சீக்கிரம்!" என்றாள் அந்த வெகுளிப் பெண்.

படகுக் காரில் ஜோடி கிளம்பியது. போக வேண்டிய இடமெல்லாம் போனார்கள். ஹோட்டலில் சிற்றுண்டி, கொட்டகையில் சினிமா, மாலையும் வந்தது. காரும் கடற்கரையை நோக்கி நகர்ந்து வந்தது. கடற்கரைக் காற்றும், இருவர் உள்ளங்களிலும் சிறு புயலைக் கிளப்பியது. காரை நிறுத்திவிட்டுக் கால்களை அலையில் நனைத்துக் கொண்டு, மணலில் உட்கார்ந்து மணலைக் கயிறாகத் திரிப்பது போல் கைகளிலும் அளைந்தார்கள்.

அந்த வேளையில் கடற்கரைச் சாலை வழியாக ஒரு டாக்ஸி வேகமாகச் சென்று கொண்டிருந்தது. உள்ளே உட்கார்ந்து கொண்டிருந்த அந்த நபர் ஒரு கணம் பிரமித்தார். அந்த நபர் வேறு யாருமில்லை. ப. கெ. க.வின் மானேஜிங் டைரக்டர்தான். தன் கார் கடற்கரையில் நிற்பானேன்? மனைவியும் கடற்கரைக்கு வரும் நிலையில் இல்லையே! அன்று நடக்க வேண்டிய கூட்டம் நடக்கவில்லை. வீட்டுக்குப் போவோமே என்று ஆபீஸை விட்டு நடந்தவர் ஒரு டாக்ஸியைப் பிடித்து வீடு திரும்பிக் கொண்டிருந்தார். உடனே டாக்ஸியை நிறுத்திவிட்டுப் பணத்தைக் கொடுத்தார். தம் கார் அருகில் போய் நின்றார். அங்கு டிரைவர் சந்தரைக் காணோம். காரின் பின் கதவுப் பிடியை அழுத்தினார்; திறந்து கொண்டது. ஆசனத்தில் அமர்ந்தார். நரம்பெல்லாம் புடைத்துக் கொண்டன. கோபம் பொங்கி வந்தது. சந்தர் எதிரே இருந்தால் அவர் முன் கோபத்தின் பலனைத் தெரிந்து கொண்டிருப்பான். சந்தர் சட்டினி ஆகியிருப்பான். 'கல கல'வென்ற சிரிப்பொலி அவர் கவனத்தைக் கவர்ந்தது. காரை நோக்கி வந்த இரு உருவங்களில் ஒன்று சந்தர் என்று தெரிந்தது. பக்கத்தில் வந்து கொண்டிருந்த பெண் உருவத்தைக் கண்டதும் அவர் அடைந்த ஆச்சரியம் கணக்கில்லை. 'ராஸ்கல்! இந்த வேலை எவ்வளவு நாட்களாக நடந்துவருகிறது?' என்று எண்ணியவருக்கு அந்தப் பெண்ணைக் கண்டதும் என்னவோ தோன்றியது. டொபென்று பின்பக்கம் ஒளிந்து கொண்டு ஆசனத்தடியில் உட்கார்ந்து கொண்டார். காரில் அவர்கள் ஏறி உட்கார்ந்து கொண்டார்கள்.

"என்ன சாரதா, பயந்து செத்துப் போனாயே, என்ன ஆகிவிட்டது? உன்னை வீட்டிலே கொண்டு விட்டுட்டுக் காரை மூச்சுக் காட்டாமே ஷெட்டிலே விட்டுடறேன். நல்ல பிள்ளையாட்டமா. யஜமான் நேரம் கழித்துத்தானே வரப் போகிறார்?" என்று கூறிக் கொண்டே காரைக் கிளப்பினான்.

"உங்க யசமானர் ரொம்பக் கோபக்காரராமே. இப்போ நம்மைப் பார்த்தா என்ன பண்ணுவார்னு நினைக்கிறீங்க?"

"அதைப் பத்தி இப்போ என்ன கவலே? அவருக்கு எப்படிச் சீக்கிரம் கோபம் வருமோ அப்படியே அது சீக்கிரம் போயிடும். இப்போ நம்மை அவர் பார்த்தாரானால்........"

"...கழுத்தை முறிச்சுடுவார்" என்ற குரல் கேட்டு ஒரே சமயத்தில் இருவரும் குரல் வந்த பக்கம் நோக்கினார்கள்.



"ஆண்டவனே! நான் தினப் பத்திரிகை ஒன்று ஆரம்பிக்கிறேன். தினமும் கவர்ச்சியாகக் கொட்டை எழுத்தில் கொலை, ஒரு இரட்டைக் கொலையோ, மர்ம நடம் புரண்டதோ போன்ற புரட்சித் தலைப்புக்கோ பஞ்சமில்லாமல் வழி பண்ண வேண்டும்."

---

சந்தர் விஷயத்தைக் கற்பகத்திடம் ஒப்பித்தான். இதைக் கேட்ட அந்த இளகிய மனமுள்ள மங்கை சிரித்துக் கொண்டே, கணவன் முன்பு நின்றாள்.

"ஏன்னா! கோபம் தணிஞ்சுதா, ஏதோ சிரிக்கன். ஏதோ உங்கள் கார் கிடைக்குது. எடுத்துக் கொண்டு வெளியே போனார்கள். இதற்கு இப்படி ஒரு கோபமா?"

"என்ன சொன்னே? அந்தப் பெண் யார்? இவன் ஒரு கல்யாணமாகாத பெண்ணை இவ்வளவு பெரிய காரில் ஏற்றிக் கொண்டு சுத்தறான். ஏதாவது எக்கச்சக்கமா நடந்துட்டா.......!"

"கம்மா இருங்கோ. அந்தப் பெண் நம்ப ஞானகியம்மா பெண் சாரதா. அந்தப் பெண்ணை நீங்க பார்த்ததே இல்லே. சந்தர் அவளைக் கல்யாணம் செஞ்சுக்கப் போறான்."

"என்ன நம்ம ஞானகியம்மாவுக்கு இப்படி ஓர் அழகான பெண்ணா? அதை இந்தக் கரித் தடியனுக்கா கொடுக்கப் போறே?"

"நன்னா இருக்கு. ஆம்பளைக்கு எப்படி இருந்தால் என்ன? நீங்க ரொம்ப அழகுன்னு என்னை உங்களிடத்திலே தள்ளினாளே."

"ஏன், என்ன குறைஞ்சு போச்சாம்?"

"என்ன குறைஞ்சு போச்சு? பெரிய வேலே இருக்கு, பணம் இருக்கு. இதை எல்லாம் அனுபவிக்க......"

"ஓ! நீ அதைச் சொல்லிக் காண்பிக்கிறயா? எனக்கு இப்போ ஒரு யோசனை தோணறது."

"எனக்கும் தோணறது."

"எனக்குத் தோணற அதே மாதிரியா உனக்கும் தோணறதா?"

"ஏன் சத்தம் போடறேள்? மெள்ளச் சொல்லுங்கோ!"

"உனக்கென்ன தோணித்து சொல்லு?"

"சொல்லட்டுமா? கேளுங்கோ! சாரதா நல்ல பெண், தகப்பன் இல்லாதவள். சந்தரும் நம்மிடம் அநாதையாக வந்து சேர்ந்தான். ஞானகி அம்மாவும் நம்முடனே இருக்கிறார்."

"அதையிலேயே நாம் இரண்டு பேரும் சேர்ந்து சொல்வோமா? இவர்கள் கல்யாணத்தை நாமே முன்னின்று நடத்த வேண்டியது. அப்படித்தானே?"

"அப்படியேதான்."

"சரி அதற்கான ஏற்பாட்டைச் செய்."

"ஞானகி அம்மா இங்கே வாங்கோ. ஒரு நல்ல சமாசாரம்" என்று கல்யாண விஷயத்தைக் கூறியதும் அந்த அம்மாவுக்குப் பேச்சே வரவில்லை. கண்களிலிருந்து வடிந்தது ஆனந்த பாஷ்பம்.

"இந்தா சாரதா, இங்கே வா. நீ அவனுக்குக் கழுத்தைக் கொடுக்கத் தயாராக இரு. டேய், சந்தர். நீ அவள் கழுத்தில் மூணு முடிச்சுப் போட்ட பிறகுதான் அவளை வெளியே தனியாக அழைச்சுண்டு போகலாம். இல்லே, சீட்டைக் கிழிச்சுடுவேன். ஜாக்கிரதை!" என்றார் சுவாமிநாதன்.

"சரி, சார்!" என்றான் சந்தர். அப்பொழுது அவனைப் பார்த்துச் சாரதா அழகு காண்பித்துக் கொண்டிருந்ததை யாரும் கவனிக்கவில்லை.

"கற்பகம்! எனக்கு இன்னுமொரு அருமையான யோசனை. அது உனக்கும் தோணித்தா?"

"என்ன அது? மனமென்று யோசனையா சொல்லித் தள்ளறீங்க? நீங்க சொல்லுங்க. நான் கேட்டுக்கறேன்."

"ஒண்ணுமில்லே. பாவம், சாரதா தகப்பனில்லாத பெண். கல்யாணத்தை நாம் ஏற்று நடத்தப் போகிறோம். ஆனால் அந்தக் குழந்தையை நாமே தாரை வார்த்துக் கொடுக்கலாமே! நீ என்ன சொல்றே?"

"சொல்றேன். கோவிச்சுக்க மாட்டேளே!"

"ஏன், இஷ்டமில்லையா?"

"இஷ்டம்தான். இதை நீங்க நினைக்கிறதுக்கு முன்பே நான் தீர்மானம் பண்ணினது தான். ஆனால் காரணம் உங்களுக்குத் தெரியுமோ, என்னவோ!"

"என்ன காரணம்?"

"இப்படி ஒரு கன்னிகாதானம் செய்து கொடுத்தால், குழந்தை பிறக்குமாம்" என்று கூறிக்கொண்டே வெட்கத்தால் சிவந்த முகத்தைப் புடவைத் தலைப்பால் மறைத்துக் கொண்டாள் கற்பகம்.

"அட, கள்ளுக்காரி! அப்படியா சேதி? ஏதோ நான் இந்த ஜோடிகள் ஏதாவது தப்புத் தண்டா பண்ணறதுக்கு முன்னாடி கல்யாணம் செய்துவிட வேண்டும். என்று ஏற்பாடு செய்யப் போகிறேன். கல்யாணமான தும் இந்தத் தம்பதிகள் கிருஹப்பிரவேசம் செய்யப் போவது நம் 'அவுட் ஹவுஸில்' தான். எப்படி நம்ம யோசனை!"

"இது உங்கள் பிரமாதமான யோசனை. விட்டுக் கொடுத்துட்டேன். அது எனக்குத் தோணலே."

"ரொம்ப சரி. இன்னிக்கு என்ன சமையல்? இலை போடு. எனக்கு மட்டுமல்ல. அந்தப் பசங்களுக்கும் என் கூடவே இலையைப் போட்டு உட்காரவை" என்று கூறிச் சென்றார் அந்தக் கப்பல் மாடல் கார் போன்றே விசாலமான இதயம் படைத்த மனிதர்.




- என்ன தவம் செய்தேனோ?
- மகிழ்ச்சியில் ஆழ்த்தியது!
- கண்டிக்கத் துணியவும்
- தனியார் துறையிடம் விடட்டும்!

பொன்னால் பயனுண்டு
பொன்படைத்தான் தனக்கு!
பொன்னுக்குப் பயனுண்டோ,
பொன்படைத்தான் தன்னால்?
† பொன்னனையாய்! நின்பொன்னுரையால்
பொன்னான தென்வாழ்வு!
என்னதவம் செய்தேனோ
இன்னநிலை எய்துதற்கே?

நவிலுநகரம்,
24–3–68 எல். கிருஷ்ணசாமி பாரதி

† ராஜாஜி அவர்கள்

"குக்கர் எதற்கு, வைக்கோல் போதும்" வீட்டுக் குறிப்புப் பிரகாரம் இன்று எங்கள் இல்லத்தில் அரிசிச் சாதத்தை ஒரு கொதிவந்தவுடன் இறக்கி, ஒரு 4 காலன் டின்னுக்குள் வைக்கோலை நாலா பக்கத்திலும் அடிப்பாகத்திலும் வைத்து, அதில் இந்த வெண்கலப் பானையை வைத்து நன்றாக மூடி அரை மணி நேரம் கழித்துப் பார்த்ததில் பக்குவமாக வெந்த 'புஷ்பம்' போன்ற சாதம் எங்களை ஆச்சரியத்திலும், மகிழ்ச்சியிலும் ஆழ்த்தியது.

இதை நாங்கள் உடனே பரிசோதித்ததன் காரணம் என்ன தெரியுமா? இந்த ஊரில் சென்ற பதினைந்து நாட்களாக மண்ணெண்ணெய் கிடைக்கவில்லை. 'பிளாக்'கில் விலை அதிகம். ஆகையால் உடன் இதனைப் பரிசோதனை செய்தோம்.

மத்தகிரி
23–3–68 கல்யாணி ராமச்சந்திரன்

"அழகின் அடிமை" என்ற தலைப்பில் திரு கோவி. மணிசேகரன் அவர்கள் எழுதிய கதையினைப் படிக்கும் வாய்ப்புக் கிட்டியது. வெகு அருமையாக, உணர்ச்சிகரமாக சத்ரபதி சிவாஜி இந்து தர்மத்தில் எவ்வளவு பற்றுக் கொண்டிருந்தார் என்பதனை எழுதியிருந்தார்.

சென்னை–16
23–3–68 டி. கிருஷ்ணமூர்த்தி

"தாய்க்குலம் தலைகுனிகிறது" என்ற தலைப்பில் வானொலி நாடகத்தின் விமர்சனம் கண்டேன். நானும் அந்நாடகத்தைக் கேட்கும் துர்ப்பாக்கிய நிலைக்கு ஆளானேன்.

ஸ்ரீமதி ருக்மிணி பாலகிருஷ்ணன் அவர்கள் தமது கருத்தை நாடகப் பொறுப்பாளர்களுக்கு மனத்தில் படும்படி துணிவாக, சிறப்பாக, கல்கியின் வாயிலாக வெளியிட்டுள்ளது கண்டு பெருமகிழ்ச்சி கொண்டேன். ஸ்ரீமதி ருக்மிணி பாலகிருஷ்ணன் போன்ற தாய்மார்கள் சிலர், இதுபோன்ற தரக்குறைவான வானொலி நிகழ்ச்சிகளை மட்டுமல்ல, நாடகம், சினிமா போன்ற சமுதாயத்தில் நடக்கும் பல்வேறு நிகழ்ச்சிகளையும் பார்த்துவிட்டோ, கேட்டுவிட்டோ பேசாமல் இருக்காமல், அவ்விதமான கேலிக் கூத்துக்களைக் கண்டிக்கத் துணிவார்களேயானால் நாடும் முன்னேறும்; நாமும் உயர்வோம்.

கடலூர்,
28–3–68 லெ. கலைஅண்ணாமலை

பொது இன்ஷ்யூரன்ஸைத் தேசிய மயமாக்குவதுபற்றிக் காங்கிரஸ் அரசு தீவிரமாக யோசிக்கிறது. ஆயுள் இன்ஷ்யூரன்ஸை ஒரு கை பார்த்தாயிற்று என்று இப்போது இதற்கு வந்திருக்கிறார்கள் போலும்!

'ஹிந்துஸ்தான் டைம்ஸில்' 'ஆசிரியருக்குக் கடிதங்கள்' பகுதியில் மாஜி எம். பி.யான திரு க்ஷமா சென் அவர்கள், சில மாதங்களுக்கு முன் ஒரு கடிதம் எழுதியிருந்தார். 1956ம் ஆண்டு மக்கள் சபையில் 'செலக்ட் கமிட்டி'யில் தானும் ஓர் அங்கத்தினராயிருந்ததாகவும், லைஃப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் நன்கு செயலாற்றுமென நம்பி, தமது ஆதரவைத் தெரிவித்து வோட்டளித்ததாயும் ஆனால் எல். ஐ. ஸி.யின் பதினொரு ஆண்டு வளர்ச்சியை நோக்கும்போது, தாம் ஆதரவு தெரிவித்தமைக்கு இப்போது வருந்துவதாகவும் எழுதுகிறார். தவிர, எப்போதும் தீர்க்கமாகச் சிந்தனை செய்பவரும், பயனுள்ள பணிகளைப் புரிந்து வருபவரும், நாட்டின் வளர்ச்சியில் மிகுந்த அக்கறை கொண்டு உண்மையிலேயே தேச முன்னேற்றத்தை விரும்பும் ஒருவருமான உதவி ஜனாதிபதி வி. வி. கிரி அவர்கள் இப்போது தமது பேச்சுக்களில் தனியார் துறையின் நிர்வாகத் திறமையைப் புகழ்ந்து வருவதுடன், அதனைத் திறம்பட நடத்தும் அதிகாரிகள் அரசாங்க நிறுவனங்களில் நியமிக்கப்பட அரசு முயல வேண்டும் என வற்புறுத்தி வருகிறார். நிர்வாகத் திறமை, கட்டுக்கோப்பு, பலம், ஸ்திரத் தன்மை ஆகியவற்றை உத்தேசித்து மத்திய அரசு பொது இன்ஷ்யூரன்ஸைத் தனியார் துறையினரிடத்திலிருந்து பறிக்கக் கூடாது.

மதுரை-3
28–3–68 டி. ஆர். நடராஜன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam





அவர்கள் தோற்றத்திலே
ஒற்றுமையில்லை, ஆனால்
அவர்கள் அனைவரும்
உபயோகிப்பது
பரிபூரண ஒப்பனைச்
சாதனமான



க்ருக்ஸ்
# லாக்டோ-காலமைன்

இழைவான மென்மை வாய்ந்த
க்ருக்ஸ் லாக்டோ-காலமைன் எத்தகைய
குறைபாட்டையும் ஒளித்துவிடும்
பரிபூரணஒப்பனைச் சாதனம்.
காலைதோறும் சருமத்தின்மீது தடவுங்கள்
லாக்டோ-காலமைன. இதமான
ஆற்றும் குணமுள்ள காலமைன்,
செறிவூட்டும் செயல் திறனுள்ள
விட்ச் ஹேஸல் இரண்டும் இணைந்து
உங்கள் சருமத்திற்கு எழிலூட்டும்.

க்ருக்ஸ்
# லாக்டோ-காலமைன்

மாசில்லா அழகுக்கு!
மேலும் உங்களுக்கு உரிய அழகு
சாதனங்கள் லாக்டோ-காலமைன்
டால்கம் பவுடர் மற்றும் க்ரீம்.




களவிட்டமுடியாத க்ருக்ஸ் லீலும்,
க்ருக்ஸ் சின்னமும் இருக்கிறதா
என்று கவனித்து வாங்குங்கள்
க்ருக்ஸ் இன்டர்:ப்ரான் லிமிடெட, பம்பாய்-25.

:IL. 73 TM

